𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑍇 —

'𑌯𑌸𑍍𑌯𑌾𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍍𑌯𑌾𑌂 𑌨𑌰𑌕𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾 𑌹𑌤𑌃 । 𑌤𑌸𑍍𑌯𑌾𑌮𑌭𑍍𑌯𑌞𑍍𑌜𑌨𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌨𑌰𑍈𑌰𑍍𑌨𑌰𑌕𑌭𑍀𑌰𑍁𑌭𑌿𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌕𑌾𑌲𑌾𑌦𑌰𑍍𑌶𑍇𑌽𑌪𑌿 —

'𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍂𑌷 𑌆𑌶𑍍𑌵𑌯𑍁𑌗𑍍𑌦𑌰𑍍𑌶𑍇 𑌕𑍃𑌤𑌾𑌭𑍍𑌯𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌮𑌙𑍍𑌗𑌲𑍈𑌃 । 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾 𑌸𑌂𑌪𑍂𑌜𑌯𑍇𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌮𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌵𑌿𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑍇' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 —

'𑌸𑍍𑌵𑌾𑌤𑍀𑌸𑍍𑌥𑌿𑌤𑍇 𑌰𑌵𑌾𑌵𑌿𑌨𑍍𑌦𑍁𑌰𑍍𑌯𑌦𑌿 𑌸𑍍𑌵𑌾𑌤𑍀𑌗𑌤𑍋 𑌭𑌵𑍇𑌤𑍍 । 𑌪𑌞𑍍𑌚𑌤𑍍𑌵𑌗𑌮𑍍𑌭𑌸𑌾 𑌸𑍍𑌨𑌾𑌯𑍀 𑌕𑍃𑌤𑌾𑌭𑍍𑌯𑌙𑍍𑌗𑌵𑌿𑌧𑌿𑌰𑍍𑌨𑌰𑌃 ॥ 𑌨𑍀𑌰𑌾𑌜𑌿𑌤𑍋 𑌮𑌹𑌾𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌮𑌰𑍍𑌚𑌯𑌨𑍍 𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 । 𑌦𑍀𑌪𑍈𑌰𑍍𑌨𑍀𑌰𑌾𑌜𑌨𑌾𑌦𑌤𑍍𑌰 𑌦𑍀𑌪𑌾𑌵𑌲𑌿𑌰𑌿𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾' 𑌇𑌤𑌿 ॥

𑌸𑌾𑌰𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑍇 —

'𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍀 𑌯𑌾𑌽𑌽𑌶𑍍𑌵𑌯𑍁𑌜𑌸𑍍𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌯𑌰𑍍𑌕𑌯𑍁

---

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் :**—எந்தச் சதுர்தசியில் ராத்ரியில், நரகாஸுரன் விஷ்ணுவினால் கொல்லப்பட்டானோ அந்த ராத்ரியில், நரகத்தினின்றும் பயந்த மனிதர்கள் அப்யங்கம் செய்து கொண்டு ஸ்நானம் செய்யவேண்டும்.

**காலாதர்சத்திலும் :**— ஆச்வயுஜமாஸத்தின் அமையில் விடியற்காலத்தில் அப்யங்கம் முதலிய மங்களங்களைச் செய்து கொண்டு, பக்தியுடன், லக்ஷ்மியைப் பூஜிக்கவேண்டும், மூதேவியின் நிவ்ருத்திக்காக.

**விஷ்ணுபுராணத்தில் :**— ஸூர்யன் ஸ்வாதியிலிருக்கும் பொழுது, சந்திரனும் ஸ்வாதிக்கு வரும்பொழுது, மனிதன் அப்யங்கம் செய்துகொண்டு, ஐந்து பட்டைகள் சேர்ந்த ஜலத்தால் ஸ்நானம் செய்து, நீராஜனம் செய்யப்பட்டவனாய், மஹாலக்ஷ்மியைப் பூஜித்தால், ஸம்பத்தை அடைகிறான். இக்காலத்தில் தீபங்களால் நீராஜனம் செய்வதால் இது 'தீபாவளி' எனச் சொல்லப்பட்டது.

**ஸாரஸங்க்ரஹத்தில் :**— ஸ்வாதியில் உள்ள ஸூர்யனுடன் கூடிய ஆச்வயுஜ க்ருஷ்ணசதுர்தசியில் உஷ:காலத்தில், ஸம்-

ஜ்ஞாச ஸமாசரேத் ப்ரபாதே | ஸ்நாநம் ஸமப்யஜ்ய நரைஸ்து கார்யம் ஸுகந்திதைலேந விபூதிகாமை: || தைலே லக்ஷ்மீர் ஜலே கங்கா தீபாவல்யாம் திதௌ வஸேத் | அலக்ஷ்மீபரிஹாரார்த்தம் அப்யங்கஸ்நாநமாசரேத் || தத ஆபரணம் வஸ்த்ரம் தாரயேத் ஸகலஸம்பதே' இதி ||

ஸ்ம்ருத்யர்த்தஸாரே—

'தைலாப்யங்கே நிஷித்தாஸ்ஸ்யு: ஸர்வாஸ்து திதயஸ்ஸதா | த்விதீயாம் வர்ஜயித்வைவ த்ருஷ்டாத்ருஷ்டவிரோதத:' இதி ||

ப்ராயஶஸ்ஸர்வாஸு திதிஷு அப்யங்கஸ்ய நிஷேதே ப்ராப்தே விஶேஷமப்யநுஜாநாதி ப்ரசேதா:—

'ஸார்ஷபம் கந்ததைலம் ச யத்தைலம் புஷ்பவாஸிதம் | அந்யத்ரவ்யயுதம் தைலம் ந துஷ்யதி கதாசந' இதி ||

---

பத்தை விரும்பும் மனிதர்கள் வாஸனையுள்ள தைலத்தினல் அப்யங்கம் செய்துகொண்டு, ஸ்நானம் செய்யவேண்டும். தீபாவளி தினததில், தைலத்தில் லக்ஷ்மியும், ஜலத்தில் கங்கையும் வஸிப்பாள். ஆகையால் அலக்ஷ்மியை விலக்குவதற்காக அப்யங்க ஸ்நானம் செய்யவேண்டும். பிறகு, ஸகல ஸம்பத்து முண்டாவதற்காக, ஆபரணம், வஸ்த்ரம் இவைகளைத் தரிக்க வேண்டும்.

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில் :—** தைலாப்யங்க விஷயத்தில், த்விதீயையைத் தவிர்த்து மற்ற எல்லாத் திதிகளும், த்ருஷ்டமும் அத்ருஷ்டமுமான இரண்டுவித தோஷத்தாலும் நிஷித்தங்களாகவே ஆகும்.

அநேகமாய் எல்லாத் திதிகளிலும் அப்யங்கத்திற்கு நிஷேதம் ப்ராப்தமாயிருக்கும் பொழுது விசேஷத்தைச் சொல்லுகிறார்,

**ப்ரசேதஸ் :—** கடுகின் எண்ணெயும், வாஸனைத் தைலமும், புஷ்பத்தினல் வாஸனையுள்ள தைலமும், வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலமும் ஒருகாலும் துஷ்டமாகாது.

𑌯𑌮𑍋𑌽𑌪𑌿—

"𑌘𑍃𑌤𑌂 𑌚 𑌸𑌾𑌰𑍍𑌷𑌪𑌂 𑌤𑍈𑌲𑌂 𑌯𑌤𑍍𑌤𑍈𑌲𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌵𑌾𑌸𑌿𑌤𑌮𑍍 । 𑌨 𑌦𑍋𑌷𑌃 𑌪𑌕𑍍𑌵𑌤𑍈𑌲𑍇𑌷𑍁 𑌸𑍍𑌨𑌾𑌨𑌾𑌭𑍍𑌯𑌙𑍍𑌗𑍇𑌷𑍁 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃" 𑌇𑌤𑌿 ॥

𑌸𑌂𑌗𑍍𑌰𑌹𑍇—

"𑌪𑌕𑍍𑌵𑌤𑍈𑌲𑌂 𑌗𑌨𑍍𑌧𑌤𑍈𑌲𑌂 𑌸𑌾𑌰𑍍𑌷𑌪𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌵𑌾𑌸𑌿𑌤𑌮𑍍 । 𑌵𑌰𑍍𑌜𑍍𑌯𑌵𑌾𑌰𑍇𑌷𑍍𑌵𑌦𑍁𑌷𑍍𑌟𑌂 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌯𑍁𑌤𑌂 𑌤𑌥𑌾" 𑌇𑌤𑌿 ॥

𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑍇—

"𑌨𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑌦𑌿𑌵𑌸𑍇 𑌵𑌾𑌰𑍇 𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌚 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌤𑌸𑍍𑌯 𑌚 । 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌯𑍁𑌤𑌂 𑌤𑍈𑌲𑌂 𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 𑌕𑌦𑌾𑌚𑌨 ॥ 𑌶𑌵𑌾𑌨𑍁𑌗𑌮𑌨𑌂 𑌕𑍍𑌷𑍌𑌰𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌨𑌾𑌭𑍍𑌯𑌞𑍍𑌜𑌨𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 । 𑌸𑍍𑌨𑌾𑌨𑍀𑌯𑌂 𑌚 𑌤𑌥𑌾 𑌪𑌿𑌷𑍍𑌟𑌾 𑌨 𑌶𑍁𑌧𑍍𑌯𑌤𑌿 𑌕𑌦𑌾𑌚𑌨" 𑌇𑌤𑌿 ॥

𑌸𑌤𑍍𑌯𑌵𑍍𑌰𑌤𑌃—

"𑌪𑌿𑌷𑍍𑌟𑌪𑌕𑍍𑌵𑌾𑌨𑍍𑌨𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌘𑍃𑌤𑍇𑌨𑌾𑌪𑌿 𑌜𑌲𑍇𑌨 𑌵𑌾 ।

---

**யமனும் :—** நெய், கடுகெண்ணெய், புஷ்பத்தால் வாஸனை யேற்றப்பட்ட தைலமும், காய்ச்சப்பட்ட தைலங்களும் அப்யங்க ஸ்நானத்தில் தோஷாவஹங்களாகாது.

**ஸங்க்ரஹத்தில் :—** காய்ச்சப்பட்ட தைலம், வாஸனைத் தைலம், கடுகெண்ணெய், புஷ்பவாஸனையுள்ள தைலம், வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலம் இவை நிஷித்த தினங்களிலும் துஷ்டங்களாவதில்லை.

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்:–** நிஷித்த தினத்திலும், நிஷித்த வாரத்திலும், ராத்ரியிலும், வ்யாதியுள்ளவனுக்கும், வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலம் ஒரு பொழுதும் துஷ்டமாகாது. சவானுகமனம் செய்தபிறகும், க்ஷௌரம் செய்துகொண்ட பிறகும் அப்யங்க ஸ்நானம் செய்யக்கூடாது. வாஸனைப் பொடி முதலியதையும் உபயோகிக்கக் கூடாது. உபயோகிப்பவன் ஒருகாலும் சுத்தனாகான்.

**ஸத்யவ்ரதர் :—** மாவு, பக்வமான கஞ்சி, நெய், ஜலம் இவை களிலொன்றுடன் சேர்ந்ததானால், பச்சையான எண்ணெயும்

𑌆𑌮𑌂 𑌵𑌾𑌽𑌪𑌿 𑌯𑍁𑌤𑌂 𑌤𑍈𑌲𑌂 𑌨 𑌕𑌦𑌾𑌚𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ 𑌰𑍋𑌗𑌾𑌰𑍍𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌤𑌥𑌾 𑌤𑍈𑌲𑌂 𑌜𑌾𑌤𑍁 𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌾𑌰𑌾𑌹𑍇 —

'𑌤𑌿𑌥𑌿𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌨𑌿𑌷𑌿𑌦𑍍𑌧𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌷𑍁 । 𑌤𑍈𑌲𑌮𑌾𑌜𑍍𑌯𑍇𑌨 𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 [illegible] 𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌪𑍍𑌨𑍁𑌯𑌾𑌤𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌰𑍇 —

'𑌰𑌵𑍌 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌗𑍁𑌰𑍌 𑌦𑍂𑌰𑍍𑌵𑌾𑌂 𑌭𑍃𑌗𑍌 𑌗𑍋𑌮𑌯𑌮𑍇𑌵 𑌚 । 𑌭𑍌𑌮𑍇 𑌭𑍂𑌮𑌿𑌂 𑌵𑌿𑌨𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌯 𑌤𑍈𑌲𑌾𑌭𑍍𑌯𑌙𑍍𑌗𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ॥ 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌯𑍁𑌤𑌂 𑌤𑍈𑌲𑌂 𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑍇𑌦𑍍 𑌗𑍍𑌰𑌹𑌣𑌂 𑌵𑌿𑌨𑌾 । 𑌤𑍁𑌲𑌸𑍀𑌦𑌲𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌗𑍍𑌰𑌹𑌣𑍇𑌽𑌪𑌿 𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ 𑌶𑌿𑌰𑍋𑌽𑌭𑍍𑌯𑌕𑍍𑌤𑍇𑌨 𑌤𑍈𑌲𑍇𑌨 𑌨𑌾𑌙𑍍𑌗𑌂 𑌕𑌿𑌂𑌚𑌿𑌦𑍁𑌪𑌸𑍍𑌪𑍃𑌶𑍇𑌤𑍍 । 𑌤𑌿𑌲𑌪𑌿𑌷𑍍𑌟𑌂 𑌚 𑌨𑌾𑌶𑍍𑌨𑍀𑌯𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌚𑌾𑌯𑍁𑌰𑍍𑌨 𑌰𑌿𑌷𑍍𑌯𑌤𑌿' 𑌇𑌤𑌿 ॥

𑌗𑌾𑌰𑍍𑌗𑍍𑌯𑌃 —

'[illegible] 𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌶𑍀𑌤𑌾𑌦𑍍𑌭𑌿𑌃 𑌕𑌾𑌮𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 ।

---

ஒருகாலும துஷ்டமாகாது. ரோகத்தால் பீடிக்கப்பட்டவனுக்குத் தைலம் ஒருகாலும் தோஷாவஹமாகாது.

**புராணத்தில் :—** நிஷித்தமான திதி, நக்ஷத்ரம், வாரம் இவைகளிலும், ராத்ரிகளிலும், நெய் அல்லது ஜலத்துடன் கூடிய தைலம் சுத்தமாய் ஆகும்.

**மற்றொரு ஸ்ம்ருதியில் :—** பானுவாரத்தில் புஷ்பத்தையும், குருவாரத்தில் அறுகையும, வெள்ளிக்கிழமையில் கோமயத்தையும், பௌமவாரத்தில் பூமியையும் போட்டு தைலாப்யங்கம் செய்துகொள்ளலாம். வேறு த்ரவ்யத்துடன் கூடிய தைலம், க்ரஹணம் தவிர மற்றக்காலத்தில் துஷ்டமாகாது. துளஸீதளத்துடன் கூடிய தைலம் க்ரஹணத்திலும் துஷ்டமாகாது. தலையில் தேய்த்துக்கொண்ட தைலத்தால் வேறு ஒரு அங்கத்தையும் தடவக்கூடாது. எள்ளுடன் மாவைப் புஜிக்கக் கூடாது. இந்த நியமத்துடனிருப்பவனுக்கு ஆயுள் குறையாது.

**கார்க்யர் :—** நைமித்திக ஸ்நானம், காம்ய ஸ்நானம் இவை

நித்யம் யாத்ருச்சிகம் சைவ யதாகாமி ஸமாசரேத்' இதி ॥

ஸத்யவ்ரத:—

'மந்த்ரவந்மந்த்ரஹீனஞ்ச ஸ்நானம் த்விவிதமீரிதம் । மந்த்ரைர்யத் க்ரியதே ஸ்நானம் மந்த்ரவத்தத்ப்ரகீர்த்திதம் ॥ மலாபநோதே தைலாத்யை: மந்த்ரஹீனம் மலாபஹம்' இதி ॥

ஸ்ம்ருதிப்ரதீபிகாயாம்—

'அனுத்த்ருதைருத்த்ருதைர்வா ஜலைஸ்ஸ்நானம் ஸமாசரேத்' இதி ॥

தேவல:—

'உத்த்ருதாஸ்வபி சுத்யந்தி சுத்தை: பாத்ரைஸ்ஸமுத்த்ருதா: । ஏகராத்ரோஷிதா ஆபஸ்த்யாஜ்யாஶ்ஶுத்தா அபி ஸ்வயம்' இதி ॥

மஹாபாரதே—

'பாதாப்யங்கம் ஶிரோப்யங்கம் த்விஜோச்சிஷ்டாவமார்ஜனம் ।

---

களை, சீத ஜலத்தால் செய்யவேண்டும். நித்ய ஸ்நானம், யாத்ருச்சிக ஸ்நானம் இவைகளை இஷ்டப்படி செய்யலாம்.

**ஸத்யவ்ரதர்** :— மந்த்ரமுள்ளதென்றும், மந்த்ரமில்லாததென்றும் இரண்டுவிதமாய் ஸ்நானம் சொல்லப்பட்டுள்ளது. மந்த்ரங்களுடன் செய்யப்படும் ஸ்நானம் மந்த்ர ஸ்நானம் எனப்படும். அழுக்கை யகற்றுவதற்காக எண்ணெய் முதலியதுடன் செய்யப்படும் மலாபகர்ஷண ஸ்நானம் அமந்த்ரக ஸ்நானம் எனப்படும்.

**ஸ்ம்ருதிப்ரதீபிகையில்** :— வெளியிலெடுக்கப்படாத ஜலங்களாலோ, வெளியிலெடுக்கப்பட்ட ஜலங்களாலோ ஸ்நானம் செய்யலாம்.

**தேவலர்** :— சுத்தமான பாத்ரங்களால் எடுக்கப்பட்டால், உத்ருதஜலங்களும் சுத்தங்களேயாகும். சுத்தமான ஜலமாயினும், ஒரு ராத்ரி அதிக்ரமித்தால் அது வர்ஜிக்கத் தகுந்ததாகும்.

**மஹாபாரதத்தில்** :— ப்ராம்ஹணரின் பாதத்தில் எண்ணெய் தடவுவதும், அவரின் சிரஸ்ஸில் எண்ணெய் தடவுவதும், ப்ராம்ஹணனின் உச்சிஷ்டத்தைச் சுத்தம் செய்வதும்,

𑌏𑌕𑍈𑌕𑌂 𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌰𑌾𑌜𑌸𑍂𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿॥

𑌨𑌾𑌰𑌦𑍀𑌯𑍇—

'𑌤𑍈𑌲𑌾𑌭𑍍𑌯𑌙𑍍𑌗𑌂 𑌮𑌹𑌾𑌰𑌾𑌜 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌂 𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃। 𑌸 𑌸𑍍𑌨𑌾𑌤𑍋 𑌵𑌰𑍍𑌷𑌶𑌤𑌂 𑌸𑌾𑌗𑍍𑌰𑌂 𑌗𑌙𑍍𑌗𑌾𑌯𑌾𑌂 𑌨𑌾𑌤𑍍𑌰 𑌸𑌂𑌶𑌯𑌃' 𑌇𑌤𑌿॥

𑌇𑌤𑌿 𑌮𑌲𑌾𑌪𑌕𑌰𑍍𑌷𑌣𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍍॥

### 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍍॥



𑌅𑌥 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍍॥ 𑌤𑌤𑍍𑌰 𑌶𑌙𑍍𑌖𑌃— '𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌥𑌾𑌵𑌦𑍍𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍। 𑌸𑌰𑌸𑍍𑌸𑍁 𑌦𑍇𑌵𑌖𑌾𑌤𑍇𑌷𑍁 𑌤𑍀𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌚 𑌨𑌦𑍀𑌷𑍁 𑌚॥ 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌸𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌮𑌤𑌾। 𑌮𑍃𑌦𑍍𑌭𑌿𑌰𑌦𑍍𑌭𑌿𑌶𑍍𑌚 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌶𑍌𑌚𑌮𑌾𑌦𑍌 𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿॥ 𑌜𑌲𑍇 𑌨𑌿𑌮𑌗𑍍𑌨 𑌉𑌨𑍍𑌮𑌜𑍍𑌜𑍍𑌯 𑌉𑌪𑌸𑍍𑌪𑍃𑌶𑍍𑌯

---

ஓ பாண்டவ ச்ரேஷ்டனே! ஒவ்வொன்றும் ராஜஸூயத்தை விடச் சிறந்ததாகும்.

**நாரதீயத்தில்** :— ஓ மஹாராஜனே! எவன் ப்ராம்ஹணருக்குத் தைலாப்யங்கம் செய்கின்றானோ அவன், நூறு வருஷம் பூராவும், கங்கையில் ஸ்நானம் செய்தவனாகிறான். இதில் ஸம்சயமில்லை.

மலாபகர்ஷண ஸ்நானம் முற்றிற்று.

### க்ரியா ஸ்நானம்.



இனி க்ரியா ஸ்நானம் சொல்லப்படுகிறது. அதில்,

**சங்கர்** :— க்ரியா ஸ்நானத்தை விதி உள்ளபடி சொல்லப் போகிறேன். ஸரஸ்ஸுகள், தேவகாதங்கள், தீர்த்தங்கள், நதிகள் இவைகளில் விதிப்படி ஸ்நானம் செய்வது க்ரியா ஸ்நானம் எனப்படும். அதில், ஸ்நானமே க்ரியை என்று சொல்லப்பட்டுள்ளது. ஆதியில் மண்கள், ஜலம் இவைகளால் தேஹத்தைச் சுத்திசெய்துகொள்ளவேண்டும். பிறகு ஜலத்தில் மூழ்கி எழுந்து விதிப்படி ஆசமனம் செய்து, தீர்த்தத்தை ஆவாஹ

𑌯𑌥𑌾𑌵𑌿𑌧𑌿 । 𑌤𑍀𑌰𑍍𑌥𑌸𑍍𑌯𑌾𑌵𑌾𑌹𑌨𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑍍𑌯𑌤𑌃 𑌶𑍃𑌣𑍁 ॥ 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌵𑌰𑍁𑌣𑌂 𑌦𑍇𑌵𑌮𑌮𑍍𑌭𑌸𑌾𑌂 𑌪𑌤𑌿𑌮𑍂𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍 । 𑌯𑌾𑌚𑌿𑌤𑌂 𑌦𑍇𑌹𑌿 𑌮𑍇 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌾𑌪𑌨𑍁𑌤𑍍𑌤𑌯𑍇 ॥ 𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑌾𑌵𑌾𑌹𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌘𑌵𑌿𑌨𑌿𑌷𑍂𑌦𑌨𑌮𑍍 । 𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌮𑌸𑍍𑌮𑌿𑌂𑌸𑍍𑌤𑍁 𑌮𑍇 𑌤𑍋𑌯𑍇 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌂 𑌮𑌦𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍 ॥ 𑌰𑍁𑌦𑍍𑌰𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌵𑌰𑌦𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑌪𑍍𑌸𑍁𑌷𑌦𑌶𑍍𑌚 𑌹 । 𑌚𑍈𑌵𑌾𑌪𑍍𑌸𑍁𑌷𑌦𑌂 𑌵𑌹𑍍𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇𑌽𑌘𑌨𑌿𑌷𑍂𑌦𑌨𑌮𑍍 ॥ 𑌆𑌪𑌃 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌃 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌶𑌰𑌣𑌂 𑌤𑌥𑌾 । 𑌰𑍁𑌦𑍍𑌰𑌶𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚 𑌶𑌰𑍍𑌵𑌶𑍍𑌚 𑌵𑌰𑍁𑌣𑌶𑍍𑌚𑌾𑌪 𑌏𑌵 𑌚 ॥ 𑌶𑌮𑌯𑌨𑍍𑌤𑍍𑌵𑌾𑌶𑍁 𑌮𑍇 𑌪𑌾𑌪𑌂 𑌰𑌕𑍍𑌷𑌨𑍍𑌤𑍁 𑌚 𑌸𑌦𑍈𑌵 𑌮𑌾𑌮𑍍 । 𑌇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌕𑍁𑌶𑍈𑌸𑍍𑌤𑌤𑌃 𑌸𑌂𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌂 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤 ॥ 𑌆𑌪𑍋𑌹𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑌿 𑌤𑌿𑌸𑍃𑌭𑌿𑌃 𑌯𑌥𑌾𑌵𑌦𑌨𑍁𑌪𑍂𑌰𑍍𑌵𑌶𑌃 । 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌾 𑌇𑌤𑌿 𑌚 𑌹𑍍𑌰𑍀

---

னம் செய்யவேண்டும். இனி அதைச் சொல்லுகிறேன். ஆவாஹன மந்த்ரங்கள்-"ப்ரபத்யே வருணம் + ஸதைவமாம்' என்று. அவைகளின் பொருள்—"ஜலங்களுக்குப் பதியும், பலமுள்ளவனுமான வருண தேவனைச் சரணமடைகின்றேன். ஓ வருண! என்னால் வேண்டப்பட்ட தீர்த்தத்தை, ஸகல பாபங்களையும் போக்குவதற்கு எனக்குக் கொடுப்பாயாக ஸகல பாபங்களையும் போக்குவதான தீர்த்தத்தை ஆவாஹனம் செய்யப் போகிறேன். உமதாகிய இந்தத் தீர்த்தத்தில் என்னை அனுக்ரஹிப்பதற்காக நீர் இருக்கவேண்டும். வரனைக் கொடுப்பவர்களான ருத்ரர்களையும், ஜலத்தில் வஸிப்பவர் எல்லோரையும் சரணமடைகிறேன். பாபத்தைப் போக்குகின்றவரும், ஜலததிலிருப்பவருமான அக்னியைச் சரணமடைகிறேன். புண்யப்ரதமாயும், பரிசுத்தமாயுமுள்ள ஜலத்தைச் சரணமடைகின்றேன். ருத்ரன், அக்னி, சர்வன், வருணன், ஜலம் என்ற இவர்கள் என் பாபத்தைச் சீக்கிரம் போக்கவேண்டும். எப்பொழுதும் என்னைக் காக்கவேண்டும்" என்பது. இவ்விதம் சொல்லிப் பிறகு, குசங்களால் மார்ஜனம் செய்துகொள்ளவேண்டும். 'ஆபோஹிஷ்ட' முதல் மூன்று ருக்குகளாலும், 'ஹிரண்யவர்ணா:' முதல் நான்கு ருக்குகளாலும், 'சம்நோதேவீ:, சம்ந ஆப:, இதமாப: ப்ரவஹத' என்ற ருக்குகளாலும் மார்ஜனம்

ஸூக்தஸ்யர்ஷிஸ்ததா ‖ அனுஷ்டுபிதி ததா அனுஸ்ம-
ரேச்ச | [illegible] பா⁴வவ்ருத்தோ தை³வதம் ச ஸங்கீர்தயேத் ‖
ஏவம் ஸங்கீர்தனம் க்ருத்வா மந்த்ரஸ்யாஸ்ய விசக்ஷண: | அக⁴-
மர்ஷணஸூக்தஸ்ய ஸம்ஸ்மரேத் ப்ரயதஸ்ததா ‖ ததோ(அ)ம்ப⁴-
ஸி நிமக்³னஸ்து த்ரிராவர்தயேத³க⁴மர்ஷணம் | ப்ரோக்ஷ்ய மூர்த்⁴நி
ததா மஹாவ்யாஹ்ருதிபி⁴ர்ஜலம்' இதி ‖

தீர்த²யாத்ராயாம் வர்ஜனீயான்யாஹ வ்யாஸ:—

'ச²த்ரம் ச ஹரதே பாத³ம் த்³விதீயம் ஹரதி பாது³கா | யா-
னம் ஹரேத் த்ரிபாத³ம் து ஸர்வம் ஹரதி டோலிகா ‖ ஐ-
ஶ்வர்யால்லோப⁴மோஹாத்³வா க³ச்சே²த்³யானாதி³பி⁴ஸ்து ய: | நிஷ்ப²லம்
தஸ்ய தத்தீர்த²ம் தஸ்மாத்³யானாதி³ வர்ஜயேத்' இதி ‖

விஷ்ணு:—

'கோ³யுக்தேன து யானேன தீர்த²யாத்ராம் கரோதி
ய: | ஸ யாதி நரகம் கோ⁴ரம் யாவத்³ரோமாணி வத்ஸரான்' இதி ‖

---

செய்துகொள்ளவேண்டும். பிறகு, அகமர்ஷண ஸூக்தத்தின் சந்தஸ், ருஷி, தேவதை இவைகளை ஸ்மரிக்கவேண்டும். பிறகு, ஜலத்தில் மூழ்கியவனாய், அகமர்ஷண ஸூக்தத்தை மூன்று முறை ஜபிக்கவேண்டும். மஹா வ்யாஹ்ருதிகளால், தலையில் ஜலத்தை விட்டுக்கொள்ளவேண்டும்.

தீர்த்த யாத்ரையில் விடத்தகுந்தவைகளைச் சொல்கிறார்,

**வ்யாஸர்:—** தீர்த்த யாத்ரையில் குடை உபயோகிக்கப் பட்டால் அது புண்யத்தின் கால்பாகத்தை அபஹரிக்கும். பாதரக்ஷை பாதிபாகத்தை அபஹரிக்கும். வாஹனம் முக்கால் பாகத்தை அபஹரிக்கும். டோலி முழுப்புண்யத்தையும் அபஹரிக்கும். ஐச்வர்யத்தால் அல்லது லோபத்தாலோ, மோஹத்தாலோ வாஹனம் முதலியவைகளால் எவன் தீர்த்தயாத்ரைக்குச் செல்கின்றானோ, அவனுக்கு அந்தத் தீர்த்தம் நிஷ்பலமாகும். ஆகையால் வாஹனம் முதலியவைகளை வர்ஜிக்க வேண்டும்.

**விஷ்ணு:—** எருதுகளுடன் கூடிய வாஹனத்தினால் எவன் தீர்த்தயாத்ரை செய்கின்றானோ அவன், எருதுகளின் ரோமங்கள் எவ்வளவோ அவ்வளவு வர்ஷங்கள் வரையில் கோரமான நரகத்தை அடைகின்றான்.

𑌪𑍈𑌠𑍀𑌨𑌸𑌿𑌃—

‘𑌷𑍋𑌡𑌶𑌾𑌂𑌶𑌂 𑌸 𑌲𑌭𑌤𑍇 𑌯𑌃 𑌪𑌰𑌾𑌰𑍍𑌥𑍇𑌨 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 । 𑌅𑌰𑍍𑌧𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌫𑌲𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌯𑌃 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌨𑍁𑌷𑌙𑍍𑌗𑍇𑌣 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 । 𑌸𑍍𑌨𑌾𑌨𑌜𑌂 𑌫𑌲𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑍀𑌰𑍍𑌥𑌯𑌾𑌤𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌂 𑌨 𑌤𑍁 ॥ 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌪𑌾𑌪𑌕𑍃𑌤𑌾𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑍇 𑌪𑌾𑌪𑌸𑍍𑌯 𑌶𑌮𑌨𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 । 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌫𑌲𑌦𑌂 𑌤𑍀𑌰𑍍𑌥𑌂 𑌭𑌵𑍇𑌚𑍍𑌛𑍁𑌦𑍍𑌧𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍’ 𑌇𑌤𑌿 ॥

𑌵𑍍𑌯𑌾𑌸𑍋𑌽𑌪𑌿—

‘𑌯𑌸𑍍𑌯 𑌹𑌸𑍍𑌤𑍌 𑌚 𑌪𑌾𑌦𑍌 𑌚 𑌮𑌨𑌶𑍍𑌚𑍈𑌵 𑌸𑍁𑌸𑌂𑌯𑌤𑌮𑍍 । 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌤𑌪𑌶𑍍𑌚 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌸 𑌤𑍀𑌰𑍍𑌥𑌫𑌲𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇’ 𑌇𑌤𑌿 ॥

𑌵𑍃𑌦𑍍𑌧𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑌃—

‘𑌪𑌿𑌤𑌰𑌂 𑌮𑌾𑌤𑌰𑌂𑌵𑌾𑌽𑌪𑌿 𑌭𑍍𑌰𑌾𑌤𑌰𑌂 𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 । 𑌨𑌿𑌮𑌜𑍍𑌜𑍇𑌤𑍍 𑌯𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌂𑌶𑌂 𑌲𑌭𑍇𑌤 𑌸𑌃 ॥ 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌿𑌤𑍇𑌨𑌤𑍍𑌵𑌷𑍍𑌟𑌮𑌾𑌂𑌶𑌂 𑌲𑌭𑍇𑌤𑍍 𑌸𑍍𑌨𑌾𑌨𑌫𑌲𑌂 𑌨𑌰𑌃’ 𑌇𑌤𑌿 ॥

---

**பைடீநஸி :—** எவன் பிறருக்காகச் செல்கின்றானோ அவன் தீர்த்த பலத்தின் 16–ல் ஒரு பாக முள்ள பலனை அடைகிறான். வேறு கார்யத்தால் சென்றவன் தீர்த்தபலத்தின் பாதியை அடைவான். பிறருக்கு உதவியாய்ச் சென்றவன் அங்கு ஸ்நானம் செய்தால் ஸ்நானத்தின் பாதி பலத்தை அடைகிறான். தீர்த்தயாத்ராபலத்தை முழுவதும் அடைய மாட்டான். பாபம் செய்த மனிதர் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால், பாபம் மட்டில் சாந்தமாகும். சுத்தரான மனிதருக்கே, தீர்த்தம் பூர்ண பலத்தைக் கொடுப்பதாகும்.

**வ்யாஸரும் :—** எவனது கைகளும், கால்களும், மனதும் அடக்கப்பட்டிருக்கின்றனவோ, எவனுக்கு வித்யையும், தபஸ்ஸும், கீர்த்தியும் உள்ளனவோ, அவன் தீர்த்தத்தின் பலத்தை அடைகின்றான்.

**வ்ருத்த வஸிஷ்டர் :—** பிதா, மாதா, ப்ராதா, மித்ரன், குரு இவருள் எவனையாவது உத்தேசித்து ஸ்நானம் செய்தால், அந்த உத்தேச்யன், தீர்த்த பலத்தில் பன்னிரண்டிலொரு பாகத்தை அடைவான். உத்தேச்யன் ப்ரார்த்தித்துச் செய்த விஷயத்திலானால், அவன் எட்டிலொரு பாகத்தை அடைவான்.

பைடீநஸி:—

'ப்ரதிக்ருதிம் குஶமயீம் தீர்த்தவாரிணி மஜ்ஜயேத் । மஜ்ஜயேத்து யமுத்திஶ்ய அஷ்டமாம்ஶம் லபேத ஸ:' ॥ அத்ராயம் மந்த்ர:— 'குஶோஸி குஶபுத்ரோஸி ப்ரஹ்மணா நிர்மித: புரா । த்வயி ஸ்நாதே ஸ ச ஸ்நாதோ யஸ்யைதத் க்ரந்திபந்தனம்' இதி ॥

தீர்த்தபலம் ந விக்ரீணீயாத் ॥ ததாஹாபஸ்தம்ப:—

'மாம்ஸமாயுதம் ஸுக்ருதாஶாம்ச திலதண்டுலாம்ஸ்தைவ தாந்யஸ்ய விஶேஷேண நவிக்ரீணீயாத்' இதி ॥

ஸுக்ருதாஶாம் = தீர்த்தஸ்நாநாதிஸுக்ருதபலம் ॥

தர்மதாநந்து விஷயவிஶேஷே ஸ்மர்யதே— 'தேவதாநாம் பித்ரூணாம் ச மாதாபித்ரோஸ்ததைவ ச । புண்யம் தேயம் ப்ரயத்நேந நாபுண்யம் சோதிதம் க்வசித்' இதி ॥

---

**பைடீநஸி :—** குசத்தால் ப்ரதிக்ருதி செய்து, அதைத் தீர்த்த ஜலத்தில் முழுக்கவேண்டும். எவனை உத்தேசித்து முழுக்குகின்றனோ அவன் தீர்த்த பலத்தின் எட்டிலொரு பாகத்தை அடைவான். அதில் மந்த்ர மிது — 'குசோஸி + பந்தனம்' என்பது. இதன் பொருள் — 'நீ குசமாயிருக்கிறாய், சுத்தனாயிருக்கிறாய், நீ முற்காலத்தில், ப்ரஹ்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டாய். நீ ஸ்நானம் செய்த பொழுது, இந்தக் குசமுடிச்சு எவனுடையதோ அவனும் ஸ்நானம் செய்தவனாய் ஆகிறான்' என்று.

தீர்த்தபலத்தை விற்கக்கூடாது. அவ்விதமே,

**ஆபஸ்தம்பர் :—** மாம்ஸம், ஆயுதம், தீர்த்த ஸ்நானம் முதலியதின் புண்யபலம், தான்யங்களுள் எள்ளு, அரிசி இவை களையும் விற்கவேகூடாது.

தர்மதானம் சிலருக்குச் செய்யலாமென்று சொல்லப்படுகிறது—தேவதைகளுக்கும், பித்ருக்களுக்கும், மாதாபிதாக்களுக்கும் புண்யத்தை அவச்யம் கொடுக்கவேண்டும். பாபத்தை ஒருகாலும் கொடுக்கக்கூடாது.

ஶாண்டில்ய:—

'ஜீவநார்த்தம் ஹதம் தீர்த்தம் ஜீவநார்த்தம் ஹதம் வ்ரதம் । ஸந்திக்தோ ஹதோ மந்த்ரோ வ்யக்ரசித்தோ ஹதோ த்விஜ: ॥ ப்ருதிவ்யாம் யாநி தீர்த்தாநி தாநி ஸர்வாணி ஸாகரே । ஸாகரே யாநி தாநி ஸர்வாணி பாதே விப்ரஸ்ய தக்ஷிணே' இதி ॥

ஆஶ்வமேதிகே—

'அசிந்த்ய ஹரிரவ்யக்தாத்மா யத்ரைவ மதுஸூதந: । தத்தீர்த்தம் தத்பரம் ப்ரஹ்ம தத்புண்யம் தத்தபோவநம் ॥ ஆசாரவஸ்த்ரபூதேந ஸத்யஸ்வச்சக்ஷமாஶீதலேந ச । ஜ்ஞாநாம்பஸா ஸ்நாதி ஹி யஸ்து நித்யம் கிம் தஸ்ய பூய: ஸலிலேந க்ருத்யம்' இதி ॥

ஶாண்டில்ய:—

'குடும்பிநோ விநாऽந்யேஷாம் த்ருஷ்டம் தீர்த்தாதி

---

**சாண்டில்யர் :—** பிழைப்புக்காகச் செய்யப்படும் தீர்த்த ஸ்நானம் வீணாகும். ஜீவனத்திற்காகச் செய்யப்படும் வ்ரதமும் வீணாகும். ஸந்தேகிக்கப்படும் மந்த்ரம் வீணாகும். நிலையில்லாத சித்தமுடைய ப்ராம்ஹணன் வீணாகுவான். பூமியில் எவ்வளவு தீர்த்தங்கள் உண்டோ அவையெல்லாம் ஸமுத்ரத்திலிருக்கின்றன. ஸமுத்ரத்தில் எவ்வளவு தீர்த்தங்களோ அவையெல்லாம் ப்ராமஹணனின் வலது காலில் இருக்கின்றன.

**ஆச்வமேதிகத்தில் :—** அசிந்த்யஸ்வரூபரும், மதுவை வென்றவருமான ஹரியானவர் எங்கு இருக்கின்றாரோ, அது தீர்த்தம், அது பரமான ப்ரம்ஹம், அது புண்யஸ்தலம், அதுவே தபோவனமாகும். ஆசாரமாகிய வஸ்த்ரத்தால் சோதிக்கப்பட்டதும், ஸத்யத்தால் தெளிந்ததும், க்ஷமையால் சீதளமுமான, ஜ்ஞானமெனும் ஜலத்தினால் எவன் ஸ்நானம் செய்கின்றானோ அவனுக்கு மறுபடி ஜலத்தால் என்ன கார்யம் இருக்கிறது ?

**சாண்டில்யர் :—** குடும்பிகளைத் தவிர மற்றவர்க்குத் தீர்த்தம் முதலியதின் ஸேவை சொல்லப்பட்டுள்ளது. குடும்பி

𑌸𑍇𑌵𑌨𑌮𑍍 । 𑌕𑍁𑌟𑍁𑌮𑍍𑌬𑌿𑌨𑌾𑌂 𑌗𑍃𑌹𑍇 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑌿𑌕𑌲𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑍋 𑌗𑍃𑌹𑌾𑌤𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌿𑌕𑌲𑌃 = 𑌶𑍂𑌨𑍍𑌯𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌾 ॥

𑌇𑌤𑌿 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍍 ॥

## 𑌨𑌦𑍀𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌃 ॥

𑌅𑌥 𑌨𑌦𑍀𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌃 ॥ 𑌤𑌤𑍍𑌰,

𑌕𑌾𑌤𑍍𑌯𑌾𑌯𑌨𑌃—

'𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌾𑌵𑌣𑍇 𑌮𑌾𑌸𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾 𑌨𑌦𑍍𑌯𑍋 𑌰𑌜𑌸𑍍𑌵𑌲𑌾𑌃 । 𑌤𑌾𑌸𑍁 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤 𑌵𑌰𑍍𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌯𑍋𑌗𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑌃—

'𑌯𑌾𑌵𑌨𑍍𑌨𑍋𑌦𑍇𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌶𑌾𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ।
𑌤𑌾𑌵𑌤𑍍𑌸𑍍𑌰𑍋𑌤𑍋𑌵𑌹𑌾 𑌨𑌦𑍍𑌯𑍋 𑌵𑌰𑍍𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀𑌮𑍍'

---

களுக்கு வீட்டிலேயே ஸகலமும் உள்ளது. விகலன் வீட்டிலிருந்து வெளியிற் செல்லவேண்டும். விகலன் = நித்ய கர்மங்களில்லாதவன்.

க்ரியா ஸ்நானம் முற்றிற்று.

## நதிகளின் ரஜோதோஷ நிர்ணயம்.

இனி நதிகளின் ரஜோதோஷத்தின் நிர்ணயம் சொல்லப்படுகிறது. அதில்,

**காத்யாயனர்** :—ச்ராவண மாஸம் வந்தவுடன் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. கங்கையைத் தவிர்த்த மற்ற நதிகளில் ஸ்நானம் செய்யக்கூடாது.

**யோகயாக்ஞவல்க்யர்** :— தெற்குத் திக்குக்கு ஆபரணமாகிய அகஸ்த்யர் எதுவரையில் உதயமாகவில்லையோ அதுவரை, கங்கையைத் தவிர்த்த மற்ற நதிகள் ரஜஸ்வலைகளாம்.

इति। यावदगस्त्योऽदृश्यः, तावन्नदीतोयकाः रजस्वला इत्यर्थः ॥

उदयोऽपि तस्य शरद्येव ज्योतिश्शास्त्रे दर्शितः ॥ एवञ्च वर्षाकाले रजस्वला इत्युक्तं भवति ॥

मरीचिः—

'कर्कटे सरितस्सर्वा भवन्तीह रजस्वलाः। अशस्तं तदा स्नानं वर्षादौ नववारिणि' इति ॥

वृद्धगार्ग्योऽपि—

'वर्षादौ सरितस्सर्वा भवन्तीह रजस्वलाः। तासु स्नानं न कुर्वीत वर्जयित्वा तु जाह्नवीम्' इति ॥

मार्कण्डेयः—

'द्विमासं सरितस्सर्वा भवन्तीह रजस्वलाः। अशस्तं तदा स्नानं वर्षादौ नववारिणि' इति ॥

कात्यायनोऽपि—

'नभोनभस्ययोर्मध्ये सर्वा नद्यो रजस्व

---

அந்த அகஸ்த்யரின் உதயமும் சரத் காலத்திலேயே ஜ்யோதிச் சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டுள்ளது. இவ்விதமிருப்பதால் வர்ஷாகாலத்தில் ரஜஸ்வலைகள் என்று சொல்லியதாய் ஆகின்றது.

**மரீசி** :— கடக மாஸத்தில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அப்பொழுது வர்ஷாகாலாரம்பத்தில் புது ஜலத்தில் ஸ்நானம் நிஷித்தமாகும்.

**வ்ருத்த கார்க்யரும்** :— வர்ஷருதுவின் ஆதியில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அவைகளில் ஸ்நானம் செய்யக்கூடாது, கங்கையைத் தவிர்த்து.

**மார்க்கண்டேயர்** :— இங்கு, எல்லா நதிகளும் இரண்டு மாதம் முழுவதும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அப்பொழுது வர்ஷருதுவின் ஆரம்பத்தில் புது ஜலத்தில் ஸ்நானம் நிஷித்தமாகும்.

**காத்யாயனரும்** :— ச்ராவண பாத்ரபத மாஸங்களின் நடுவில், எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாகின்றன. அவைகளில்

हाः । तासु स्नानं न कुर्वीत देवर्षिपितृतर्पणम्' इति ॥

एतच्च कर्कटकादिमासद्वयाभिप्रायम् ॥ यथाह, अत्रिः—

'सिंहकर्कटयोर्मध्ये सर्वा नद्यो रजस्वलाः । स्नानादीनि कर्माणि तासु कुर्वीत मानवः' इति ॥ सिंहकर्कटमासद्वयमध्ये सर्वा रजस्वला इत्यर्थः ॥

योगयाज्ञवल्क्यः—

'रजोदोषेण दुष्टेषु स्नानं वर्ज्यं नद्यादिषु द्विजैः । कुत्सितं रजश्चैषां सन्ध्योपासनतर्पणम्' इति ॥ कुत्सितम् = गर्हितम् ॥

व्याघ्रपादः—

'सिंहकर्कटयोर्मध्ये सर्वा नद्यो रजस्वलाः । तासु स्नानं न कुर्वीत वर्जयित्वा समुद्रगाः' इति ॥ समुद्रगाः = महानदीः ॥

---

ஸ்நானத்தையும், தேவர்ஷி பித்ரு தர்ப்பணத்தையும் செய்யக் கூடாது.

இவையெல்லாம் கடகம் முதலான இரண்டு மாதங்களைச் சொல்வதிலபிப்ராயமுடையவை. ஏனெனில்,

**அத்ரி** :— ஸிம்ஹ கடக மாஸங்களின் நடுவில் எல்லா நதிகளும ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. அவைகளில், ஸ்நானம் முதலிய கர்மங்களை மனிதன் செய்யக்கூடாது. ஸிமஹ கடக மாஸங்கள் இரண்டிலும், எல்லா நதிகளும் ரஜஸ்வலைகள் என்பது பொருள்

**யோகயாக்ஞவல்க்யர்** :— நதி முதலியவையில் ரஜஸ்ஸால் துஷ்டமான ஜலத்தில் ப்ராம்ஹணர்கள் ஸ்நானத்தை வர்ஜிக்க வேண்டும். ரஜஸ் குத்ஸிதமாகியது. ப்ராம்ஹணர் செய்யும் ஸந்த்யோபாஸனம் தர்ப்பணம் இவையும் குத்ஸிதமாகும்.

**வ்யாக்ரபாதர்**:— ஸிம்ஹ கர்க்கட மாஸங்களில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாகின்றன. அவைகளில் ஸ்நானம் செய்யக் கூடாது. ஸமுத்ரத்தைச் சேரும் நதிகளை(மஹா நதிகளை)த் தவிர்த்து.

𑌤𑌤𑍍𑌰 𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑍋 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑍍𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 —

'𑌆𑌦𑍌 𑌕𑌰𑍍𑌕𑌟𑌕𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾 𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑍋 𑌰𑌜𑌸𑍍𑌵𑌲𑌾𑌃 । 𑌤𑍍𑌰𑌿𑌦𑌿𑌨𑌂 𑌤𑍁 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍇𑌽𑌹𑍍𑌨𑌿 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌃 𑌸𑍍𑌯𑍁𑌰𑍍𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀 𑌯𑌥𑌾' 𑌇𑌤𑌿 ॥

𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇𑌽𑌪𑌿 —

'𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵𑌿𑌕𑌾 𑌚 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀 𑌨𑌰𑍍𑌮𑌦𑌾 𑌤𑌥𑌾 । 𑌰𑌜𑌸𑌾 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍍𑌯𑍁𑌃 𑌕𑌰𑍍𑌕𑌟𑌾𑌤𑍍𑌤𑍁 𑌤𑍍𑌰𑍍𑌯𑌹𑌂 𑌨𑍃𑌪' 𑌇𑌤𑌿 ॥

𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑍋𑌽𑌭𑌿𑌹𑌿𑌤𑌾𑌃 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 —

'𑌗𑍋𑌦𑌾𑌵𑌰𑍀 𑌭𑍀𑌮𑌰𑌥𑍀 𑌤𑍁𑌙𑍍𑌗𑌭𑌦𑍍𑌰𑌾 𑌚 𑌵𑍇𑌣𑌿𑌕𑌾 । 𑌤𑌾𑌪𑍀 𑌪𑌯𑍋𑌷𑍍𑌣𑌿𑌕𑌾 𑌵𑌿𑌨𑍍𑌧𑍍𑌯𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍇 𑌤𑍁 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 ॥ 𑌭𑌾𑌗𑍀𑌰𑌥𑍀 𑌨𑌰𑍍𑌮𑌦𑌾 𑌚 𑌯𑌮𑍁𑌨𑌾 𑌚 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 । 𑌵𑌿𑌶𑍋𑌕𑌾 𑌚 𑌵𑌿𑌤𑌸𑍍𑌤𑌾 𑌚 𑌵𑌿𑌨𑍍𑌧𑍍𑌯𑍋𑌤𑍍𑌤𑌰𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ॥ 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑍈𑌤𑌾 𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵𑌰𑍍𑌷𑌿𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌸𑌂𑌭𑌵𑌾𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌾𑌮𑌨𑌪𑍁𑌰𑌾𑌣𑍇 𑌤𑍁 —

'𑌗𑍋𑌦𑌾𑌵𑌰𑍀 𑌭𑍀𑌮𑌰𑌥𑍀 𑌕𑍃𑌷𑍍𑌣𑌵𑍇𑌣𑍀 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 । 𑌤𑍁𑌙𑍍𑌗

---

அதில் விசேஷம் சொல்லப்பட்டுள்ளது,

**பவிஷ்யத்புராணத்தில் :—** கடக மாஸத்தில் முதலில், எல்லா மஹாநதிகளும் மூன்று நாள் ரஜஸ்வலைகளாகின்றன. நான்காவது நாளில் சுத்தைகளாய் ஆகின்றன, கங்கைபோல்.

**மஹாபாரதத்திலும் :—** ஓ அரசனே ! மஹாநதிகளும், தேவிகா, காவேரீ, நர்மதா இவைகளும், கடகமாஸம் முதலில் மூன்று நாள் ரஜஸ்ஸினால் தோஷமுள்ளவைகளாய் ஆகின்றன.

மஹாநதிகள் சொல்லப்பட்டுள்ளன,

**ப்ரம்ஹபுராணத்தில் :—** கோதாவரீ, பீமரதீ, துங்கபத்ரா, வேணிகா, தாபீ, பயோஷ்ணிகா இவை விந்த்யத்தின் தென் பாகத்திலுள்ள மஹாநதிகள். பாகீரதீ, நர்மதா, யமுனா, ஸரஸ்வதீ, விசோகா, விதஸ்தா இவை விந்த்யத்தின் வடக்குப் பாகத்திலுள்ள மஹாநதிகள், இந்தப் பன்னிரண்டு மஹாநதிகளும் தேவர்ஷி க்ஷேத்ரங்களிலிருந்து உண்டாகியவைகளாம்.

**வாமனபுராணத்திலானால்:—** கோதாவரீ, பீமரதீ, க்ருஷ்ணவேணீ, ஸரஸ்வதீ, துங்கபத்ரா, ஸுப்ரயோகா, வேணீ,

𑌸𑌹𑍍𑌯𑌾 𑌸𑌮𑍍𑌭𑍂𑌯𑍋𑌹𑌾 𑌵𑍇𑌣𑍀 𑌕𑌾𑌵𑍇𑌰𑌿𑌕𑍇𑌤𑌿 𑌚 ॥ 𑌤𑍁𑌙𑍍𑌗𑌕𑍋𑌦𑌾 𑌨𑌳𑌿𑌨𑍀 𑌰𑍇𑌵𑌾 𑌵𑌾𑌰𑌿𑌕𑍀𑌤𑌾 𑌕𑌳𑌸𑍍𑌵𑌨𑌾 । 𑌏𑌤𑌾 𑌅𑌪𑌿 𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑌸𑍍𑌸𑌹𑍍𑌯𑌪𑌾𑌦𑌾𑌦𑍍𑌵𑌿𑌨𑌿𑌸𑍍𑌸𑍃𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌨𑍃𑌸𑌿𑌂𑌹𑌪𑍁𑌰𑌾𑌣𑍇𑌽𑌪𑌿—

'𑌗𑌙𑍍𑌗𑌾 𑌚 𑌯𑌮𑍁𑌨𑌾 𑌗𑍋𑌦𑌾𑌵𑌰𑍀 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍁𑌙𑍍𑌗𑌭𑌦𑍍𑌰𑌿𑌕𑌾 । 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌪𑍁𑌣𑍍𑌯𑌾 𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌭𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌃—

'𑌉𑌦𑍍𑌭𑍂𑌤𑌾 𑌪𑌰𑍍𑌵𑌤𑌾𑌦𑍍𑌯𑍋𑌽𑌯𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑍍𑌯𑌮𑍍𑌬𑍁𑌸𑌨𑍍𑌤𑌤𑌿𑌃 । 𑌯𑌾 𑌸𑌾 𑌮𑌹𑌾𑌨𑌦𑍀 𑌜𑍍𑌞𑍇𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌪𑍍𑌰𑌣𑌾𑌶𑌿𑌨𑍀' 𑌇𑌤𑌿 ॥

𑌏𑌵𑌂 𑌮𑌹𑌾𑌨𑌦𑍀𑌤𑍍𑌵𑍇𑌨 𑌪𑌰𑌿𑌗𑌣𑌿𑌤𑌾𑌨𑌾𑌮𑍇𑌵 𑌤𑍍𑌰𑌿𑌦𑌿𑌨𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑌃 । 𑌅𑌨𑍍𑌯𑌾𑌸𑌾𑌂 𑌤𑍁 𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌗𑌾𑌮𑌿𑌨𑍀𑌨𑌾𑌮𑌪𑌿 𑌮𑌾𑌸𑌦𑍍𑌵𑌯𑌂 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌾𑌹,

𑌕𑌾𑌤𑍍𑌯𑌾𑌯𑌨𑌃—

'𑌪𑍍𑌰𑌾𑌵𑍃𑌟𑍍𑌕𑌾𑌲𑍇 𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑌸𑍍𑌸𑌨𑍍𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌰𑌜𑌸𑍍𑌵𑌲𑌾𑌃 । 𑌤𑌾𑌸𑍁 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌵𑍀𑌤 𑌵𑌰𑍍𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

---

காவேரீ, துககோதா, நளினீ, ரேவா, வாரிகீதா, களஸ்வநா என்ற இவையும் ஸஹ்யமலையின் அடியினின்றும் வெளிவந்துள்ள மஹாநதிகளாம்.

**ந்ருஸிம்ஹ புராணத்திலும் :—** கங்கா, யமுனா, கோதாவரீ, துங்கபத்ரா, காவேரீ என்ற நதிகளும் மஹாபுண்யமான மஹாநதிகள் எனச் சொல்லப்பட்டுள்ளன.

**பரத்வாஜர் :—** மலையில் உண்டாகி, ஸமுத்ரத்தை அடையும் ஜலப்ரவாஹமெதுவோ அது, ஸகல பாபங்களையு மகற்றும் மஹாநதீ என்று அறியத் தகுந்தது.

இவ்விதம் மஹாநதி யென்று எண்ணப்பட்ட நதிகளுக்கே மூன்று நாள் ரஜோதோஷம். மற்ற நதிகள் ஸமுத்ர காமினிகளாகினும் அவைகளுக்கு இரண்டு மாதம் ரஜோதோஷமுண்டு, என்ற அபிப்ராயத்தைக் கொண்டு சொல்லுகிறார்,

**காத்யாயனர் :—** வர்ஷா காலத்தில் மஹாநதிகள் நித்யமும் ரஜஸ்வலைகளாய் இருக்கின்றன. அவைகளில் ஸ்நானம் செய்யக்கூடாது, கங்கையைத் தவிர்த்து.

𑌸𑌂𑌵𑌰𑍍𑌤𑌃—

'𑌕𑌰𑍍𑌕𑌟𑌾𑌦𑍌 𑌰𑌜𑍋𑌦𑍁𑌷𑍍𑌟𑌾 𑌗𑍋𑌮𑌤𑍀 𑌵𑌾𑌸𑌰𑌤𑍍𑌰𑌯𑌮𑍍 । 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌭𑌾𑌗𑌾 𑌸𑌤𑍀 𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌃 𑌸𑌰𑌯𑍂𑌰𑍍𑌨𑌰𑍍𑌮𑌦𑌾 𑌤𑌥𑌾' 𑌇𑌤𑌿 ॥

𑌅𑌤𑍍𑌰𑌾𑌪𑌵𑌾𑌦𑌮𑌾𑌹 𑌮𑌰𑍀𑌚𑌿𑌃—

'𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌾 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌪𑍍𑌲𑌕𑍍𑌷𑌜𑌾𑌤𑌾 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 । 𑌰𑌜𑌸𑌾 𑌨𑌾𑌭𑌿𑌭𑍂𑌯𑌨𑍍𑌤𑍇 𑌯𑍇 𑌚𑌾𑌨𑍍𑌯𑍇 𑌨𑌦𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌮𑌾𑌰𑍍𑌕𑌣𑍍𑌡𑍇𑌯𑌃—

'𑌕𑌾𑌲𑌿𑌨𑍍𑌦𑍀 𑌗𑍌𑌤𑌮𑍀 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌵𑍇𑌣𑌿𑌕𑌾 𑌚 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 । 𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌦𑌭𑌿𑌜𑌾𑌤𑍍𑌯𑌾𑌚𑍍𑌚 𑌰𑌜𑍋 𑌨𑌾𑌭𑌿𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌹𑌿' 𑌇𑌤𑌿 ॥ 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑍍𑌯𑌮𑍍 = 𑌦𑍇𑌵𑌸𑌮𑍍𑌭𑌵𑌤𑍍𑌵𑌮𑍍 ॥

𑌕𑌾𑌤𑍍𑌯𑌾𑌯𑌨𑍋𑌽𑌪𑌿—

'𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍍𑌯𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌾 𑌪𑍍𑌲𑌕𑍍𑌷𑌜𑌾𑌤𑌾 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 । 𑌰𑌜𑌸𑌾 𑌨𑍈𑌵 𑌦𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌦𑌾𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾 𑌚 𑌵𑍇𑌣𑌿𑌕𑌾' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌾𑌮𑌨𑌪𑍁𑌰𑌾𑌣𑍇—

'𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 𑌨𑌦𑍀 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾 𑌤𑌥𑌾 𑌵𑍈𑌤𑌰𑌣𑍀 𑌨𑌦𑍀 ।

---

**காத்யாயனரே** :—கடக மாஸத்தின் முதலில் மூன்று நாள், கோமதீ, சந்த்ரபாகா, கோதாவரீ, ஸிந்து, ஸரயூ, நர்மதா என்ற நதிகள் ரஜோதோஷமுடையவைகளாய் இருக்கின்றன.

இங்கு அபவாதத்தைச் சொல்லுகிறார்,

**மரீசி** :—யமுனா, கங்கா, ப்லக்ஷஜா, ஸரஸ்வதீ இவைகளும், நத மென்று பெயருள்ளவைகளும் ரஜஸ்ஸினால் தோஷமடைவதில்லை.

**மார்க்கண்டேயர்** :— யமுனா, கௌதமீ, கங்கா, வேணிகா, ஸரஸ்வதீ என்ற இந்த நதிகளின் ஸாமர்த்யத்தாலும், தேவரிடமிருந்துண்டாகியதாலும், அவைகளை ரஜோதோஷம் அவமதிப்பதில்லை.

**காத்யாயனரும்** :— கங்கா, யமுனா, ப்லக்ஷஜா, ஸரஸ்வதீ, க்ருஷ்ணா, வேணிகா என்ற இவைகளும், நதங்களும் ரஜஸ்ஸினால் தோஷத்தை அடைவதில்லை.

**வாமனபுராணத்தில்** :— புண்யையான ஸரஸ்வதீ, வைத

ஶுப்ரா ச மஹாபுண்யா கங்கா மந்தாகிநீ ததா ॥ மதுப்ர வாஹாம்ஶுமதீ கௌஶிகீ பாபநாஶிநீ । த்ருஷத்வதீ மஹாபுண்யா ததா வைதரணீ நதீ ॥ ஏதாஸாம் வார்ஷிகம் புண்யம் வர்ஷகாலே ப்ரவர்த்ததே । ரஜஸ்வலாத்வமேதாஸாம் வித்யதே ந கதாசந' இதி ॥

யம:—

'கங்கா தர்மோத்பவா புண்யா யமுநா ச ஸரஸ்வதீ ।
அந்தர்கதரஜோதோஷா: ஸர்வாவஸ்தாஸ்வபி நிர்மலா:' இதி ॥

காலாதர்ஶே—

'ஸிம்ஹகர்கடயோர்மத்யே ஸர்வா நத்யோ ரஜஸ்வலா: । த்ரிதினம் ஸ்யுர்மஹாநத்யோ கோதாம் வேண்ணாம் ஸரஸ்வதீம் ॥ பாகீரதீம் ச காளிந்தீம் நதாந் ஶோணாதிகாந் விநா' இதி ॥

காத்யாயநஸ்து கங்காயா அபி ரஜோதோஷமாஹ—

'ப்ரவ்ருத்தே ஶ்ராவணே மாஸி த்ர்யஹம் கங்கா ரஜஸ்வலா ।

---

ரணீ, மஹா புண்யையான கங்கை, மந்தாகினீ, மதுப்ரவாஹா, அம்சுமதீ, பாபத்தை யகற்றும் கௌசிகி, மஹா புண்யையான த்ருஷத்வதீ, வைதரணீ என்ற இந்த நதிகளின், வர்ஷா காலத்தில் பெருகும் ஜலமும் புண்யமாகும. இவைகளுக்கு, ரஜஸ்வலையின் தன்மை ஒருகாலுமில்லை.

**யமன் :—** கங்கா, தர்மோத்பவா, யமுனு, ஸரஸ்வதீ என்ற இந்த நதிகள், எக்காலத்திலும் நிர்மலங்கள், இவைகளுக்கு ரஜோதோஷமில்லை.

**காலாதர்சத்தில் :—** ஸிம்ஹ கடக மாஸங்களில் எல்லா நதிகளும் ரஜஸ்வலைகளாய் ஆகின்றன. கோதாவரீ, பெண்ணு, ஸரஸ்வதீ, பாகீரதீ, காளிந்தீ, சோணம் முதலிய நதங்கள் இவைகளைத் தவிர்த்து மற்ற மஹா நதிகள் மூன்று நாள் ரஜஸ்வலைகளாய் ஆகும்.

**காத்யாயனரோவெனில் :—** கங்கைக்கும் ரஜோ தோஷத்தைச்சொல்லுகிருர்– 'ச்ராவணமாஸம் ஆரம்பித்தவுடன், கங்கை

𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍇𑌽𑌹𑌨𑌿 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌶𑍁𑌦𑍍𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍀' 𑌇𑌤𑌿 ॥

𑌯𑍋𑌗𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑍋𑌽𑌪𑌿 —

'𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌕𑌰𑍍𑌕𑌟𑍇 𑌦𑍇𑌵𑍀 𑌤𑍍𑌰𑍍𑌯𑌹𑌂 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌰𑌜𑌸𑍍𑌵𑌲𑌾' 𑌇𑌤𑌿 ॥

𑌅𑌤𑍍𑌰 𑌜𑌾𑌹𑍍𑌨𑌵𑍍𑌯𑌾 𑌰𑌜𑍋𑌯𑍋𑌗𑌾𑌭𑌾𑌵𑌵𑌚𑌨𑌾𑌨𑌾𑌂 𑌭𑍂𑌯𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍇𑌵 𑌯𑍁𑌕𑍍𑌤𑌮𑍍 ॥

𑌕𑍇𑌚𑌿𑌤𑍍𑌤𑍁 —

'𑌯𑌾 𑌨𑌦𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾 𑌯𑌾𑌶𑍍𑌚 𑌗𑌙𑍍𑌗𑍇𑌤𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃 । 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌕𑌰𑍍𑌕𑌟𑌕𑍇 𑌮𑌾𑌸𑍇 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑍋 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀 𑌤𑍁𑌙𑍍𑌗𑌭𑌦𑍍𑌰𑌾 𑌚 𑌕𑍃𑌷𑍍𑌣𑌵𑍇𑌣𑍀 𑌚 𑌗𑍌𑌤𑌮𑍀 । 𑌭𑌾𑌗𑍀𑌰𑌥𑍀 𑌚 𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌾 𑌪𑌞𑍍𑌚 𑌗𑌙𑍍𑌗𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌮𑌾𑌦𑌾𑌯 𑌕𑌾𑌵𑍇𑌰𑍍𑌯𑌾 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 ॥

𑌅𑌪𑌰𑍇 𑌤𑍁 — '𑌕𑌾𑌲𑌿𑌨𑍍𑌦𑍀 𑌗𑍌𑌤𑌮𑍀 𑌗𑌙𑍍𑌗𑌾 𑌵𑍇𑌣𑌿𑌕𑌾 𑌚 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 । 𑌸𑌾𑌮𑍁𑌦𑍍𑌰𑍍𑌯𑌾 𑌦𑌾𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌤𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌰𑌜𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿

---

மூன்றுநாள் ரஜஸ்வலையாயிருக்கிருள். நான்காவது நாள் வந்தவுடன் சுத்தையாய் ஆகிருள்' என்று.

**யோகயாக்ஞவல்க்யரும் :—** கடக மாஸத்தின் ஆரம்பத்தில் மூன்று நாள் கங்கை ரஜஸ்வலையாய் இருக்கிருள்.

இங்கு, கங்கைக்கு ரஜஸ்ஸம்பந்தமில்லை யென்று சொல்லும் வசனங்களே அதிகமாயிருப்பதால், கங்கைக்கு ரஜோ தோஷமில்லை என்பதே யுகதமாகும்.

**சிலரோவெனில் :—** "எவை நதம் எனப்படுகின்றனவோ, எவை கங்கை எனச் சொல்லப்பட்டுள்ளனவோ இவைகளுக்குக் கடக மாஸத்தில் ரஜோதோஷமில்லை. காவேரி, துங்கபத்ரா, க்ருஷ்ணவேணீ, கௌதமீ, பாகீரதீ என்ற ஐந்து நதிகளும் கங்கை யெனச் சொல்லப்பட்டுள்ளன" என்னும் வசனத்தைச் சொல்பவராய், காவேரிக்கு ரஜோதோஷமில்லை என்கின்றனர்.

**மற்றவரோவெனில் :-** 'யமுனை, கௌதமீ, கங்கா, வேணிகா, ஸரஸ்வதீ என்ற இந்த நதிகளை ரஜோதோஷம் அடைவதில்லை'

𑌭𑌵𑌤𑍍𑌯𑌮𑍇𑌘𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌮𑌾𑌨𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑌾𑌸𑍁 𑌗𑍌𑌤𑌮𑍀 𑌭𑌾𑌗𑍀𑌰𑌥𑍀 𑌕𑍃𑌷𑍍𑌣𑌵𑍇𑌣𑍀𑌷𑍁 𑌗𑌙𑍍𑌗𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌾𑌸𑍁 '𑌯𑌾𑌶𑍍𑌚 𑌗𑌙𑍍𑌗𑍇𑌤𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌃' 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌸𑍍𑌯 𑌸𑌾𑌵𑌕𑌾𑌶𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚, '𑌮𑌹𑌾𑌨𑌦𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵𑌿𑌕𑌾 𑌚 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀 𑌨𑌰𑍍𑌮𑌦𑌾 𑌤𑌥𑌾 । 𑌰𑌜𑌸𑌾 𑌤𑍁 𑌦𑍁𑌷𑍍𑌟𑌾𑌸𑍍𑌸𑍍𑌯𑍁𑌃 𑌕𑌰𑍍𑌕𑌟𑌾𑌦𑍌 𑌤𑍍𑌰𑍍𑌯𑌹𑌂 𑌨𑍃𑌪' 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌸𑍍𑌵𑌿𑌕𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑌵𑌚𑌨𑌾𑌚𑍍𑌚 𑌦𑌿𑌨𑌤𑍍𑌰𑌯𑌂 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑍋𑌽𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑌾𑌹𑍁𑌃 ॥

𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑌸𑍍𑌯 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌵𑌚𑌿𑌦𑌪𑌵𑌾𑌦𑌮𑌾𑌹,

𑌕𑌾𑌤𑍍𑌯𑌾𑌯𑌨𑌃—

'𑌉𑌪𑌾𑌕𑌰𑍍𑌮𑌣𑌿 𑌚𑍋𑌤𑍍𑌸𑌰𑍍𑌗𑍇 𑌪𑍍𑌰𑍇𑌤𑌸𑍍𑌨𑌾𑌨𑍇 𑌤𑌥𑍈𑌵 𑌚 ।
𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍂𑌰𑍍𑌯𑌗𑍍𑌰𑌹𑍇 𑌚𑍈𑌵 𑌰𑌜𑍋𑌦𑍋𑌷𑍋 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ।
𑌮𑌹𑌦𑌮𑍍𑌬𑍁 𑌸𑌮𑌂 𑌵𑌾𑌽𑌪𑌿 𑌯𑌦𑌿 𑌤𑍋𑌯𑌂 𑌪𑍁𑌰𑌾𑌤𑌨𑌮𑍍 । 𑌨𑌵𑌾𑌮𑍍𑌬𑍁𑌮𑌿𑌶𑍍𑌰𑌿𑌤𑌂 𑌤𑍇𑌨 𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑍀𑌤𑌿 𑌸𑍂𑌰𑌯𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰𑌪𑌾𑌦𑌃—

'𑌅𑌭𑌾𑌵𑍇 𑌕𑍂𑌪𑌵𑌾𑌪𑍀𑌨𑌾𑌮𑌨𑌪𑌾𑌯𑌿𑌪𑌯𑍋𑌯𑍁𑌤𑌾𑌮𑍍 ।

---

என்ற வசனப்படி ரஜோதோஷமில்லாத கௌதமீ, பாகீரதீ, க்ருஷ்ணவேணீ என்றவைகள் கங்கையெனப் பெயருள்ளதால் அவைகளில் 'யாச்சகங்கா: ப்ரகீர்த்திதா:' என்ற வசனம் ஸாவகாசமாயிருப்பதாலும், "மஹாநதிகளான தேவிகா, காவேரீ, நர்மதா இவைகள், கடக மாஸத்தின் முதலில் மூன்று நாள் ரஜோதோஷமுள்ளவைகளாய் ஆகின்றன" என்று, மஹாபாரதத்திலுள்ள விசேஷ வசனத்தாலும், மூன்று நாள் ரஜோதோஷ முண்டென்கின்றனர்.

இவ்விதம் சொல்லப்பட்டுள்ள ரஜோதோஷத்திற்குச் சிற்சிலவிடங்களில் அபவாதத்தைச் சொல்லுகிறார்,

**காத்யாயனர் :—** உபாகர்மம், உத்ஸர்ஜனம், ப்ரேதஸ்நானம, சந்த்ர ஸூர்ய க்ரஹணம் இவைகளில் ரஜோதோஷமில்லை. புதிதாய் வரும் ஜலத்தைவிட அதிகமாகவோ, ஸமமாகவோ உள்ள நதியின் முந்திய ஜலத்துடன் புது ஜலம் சேர்ந்தால் அந்த ஜலம் துஷ்டமாகாதென்று அறிந்தவர் சொல்லுகின்றனர்.

**வ்யாக்ரபாதர் :—** குறைவற்ற ஜலமுடைய கிணர்கள்,

रजोदोषेऽपि वापी ग्रामभोग्या न दुष्यति' इति ॥

इति नदीरजोदोषनिर्णयः ॥

---

गौणस्नानानि ॥

अथ गौणस्नानानि । तत्र,

दक्षः—

'अशिरस्कं भवेत् स्नानं कण्ठात् शक्तितः ।
आर्द्रेण वाससा वाऽपि सर्वाङ्गपरिमार्जनम्' इति ॥

जाबालिः—

'अशिरस्कं भवेत् स्नानं स्नानाशक्तौ तु कर्मिणः ।
नाभिमात्रं निमज्ज्य वा कटिं वा क्षालयेज्जलैः ॥
आर्द्रेण वाससा वाऽङ्गमार्जनं कापिलं विदुः' इति ॥

---

வாபிகள் இவை இல்லாவிடில், ரஜோதோஷமுள்ள ஜலத்தை யும் க்ராமத்தார் உபயோகிப்பது தோஷாவஹமாகாது.

நதிகளின் ரஜோதோஷ நிர்ணயம் முற்றிற்று.

---

## கௌண ஸ்நானங்கள்.

இனி கௌண ஸ்நானங்கள் சொல்லப்படுகின்றன. அதில்,

**தக்ஷர்** :— தலையை முழுக்காமல் கழுத்துவரை நனைப்ப தும், அதிலும் சக்தியில்லாவிடில் இடுப்புவரையில் நனைப்பதும், அல்லது ஈரமான வஸ்த்ரத்தால் எல்லா அங்கங்களையும் துடைத்துக்கொள்வதும் ஸ்நானமாகும்.

**ஜாபாலி** :— கர்மத்தை அனுஷ்டிப்பவனுக்குச் சக்தி இல் லாவிடில், தலையை முழுக்காமல் ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அல்லது, நாபிவரையில் ஜலத்தில் முழுகி இடுப்பை ஜலத்தால் அலம்பலாம். அல்லது, ஈரமான வஸ்த்ரத்தால் அங்கங்களைத் துடைத்துக் கொள்ளலாம், இதைக் காபில ஸ்நானம் என் கின்றனர்.

𑌪𑌾𑌰𑌾𑌶𑌰𑌃—

'𑌸𑍍𑌨𑌾𑌨𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌾𑌨𑌿 𑌮𑌹𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 । 𑌆𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌵𑌾𑌰𑍁𑌣𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 ॥ 𑌆𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌭𑌸𑍍𑌮𑌨𑌾 𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑌵𑌗𑌾𑌹𑍍𑌯𑌂 𑌤𑍁 𑌵𑌾𑌰𑍁𑌣𑌮𑍍 । 𑌆𑌪𑍋𑌹𑌿𑌷𑍍𑌠𑍇𑌤𑌿 𑌚 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌗𑍋𑌰𑌜𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌸𑌾𑌤𑌪𑌵𑌰𑍍𑌷𑍇𑌣 𑌤𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌨𑌾𑌤𑍍𑌵𑌾 𑌤𑍁 𑌗𑌙𑍍𑌗𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌨𑌾𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃' 𑌇𑌤𑌿 ॥

𑌦𑌕𑍍𑌷𑌃—

'𑌆𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌵𑌾𑌰𑍁𑌣𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 । 𑌪𑌞𑍍𑌚 𑌸𑍍𑌨𑌾𑌨𑌾𑌨𑌿 𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑌿 𑌮𑌨𑍁𑌃 𑌸𑍍𑌵𑌾𑌯𑌮𑍍𑌭𑍁𑌵𑍋𑌽𑌬𑍍𑌰𑌵𑍀𑌤𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑍍𑌯𑌾𑌸𑌃—

'𑌅𑌶𑌕𑍍𑌤𑌾𑌵𑌶𑌿𑌰𑌸𑍍𑌕𑌂 𑌵𑌾 𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑌸𑍍𑌯 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 । 𑌆𑌰𑍍𑌦𑍍𑌰𑍇𑌣 𑌵𑌾𑌸𑌸𑌾𑌵𑌾𑌽𑌙𑍍𑌗𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌂 𑌕𑌾𑌪𑌿𑌲𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌾𑌦𑍀𑌨𑍍𑌯𑌵𑌾𑌽𑌶𑌕𑍍𑌤𑍌 𑌸𑍍𑌨𑌾𑌨𑌾𑌨𑍍𑌯𑌾𑌹𑍁𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌃 । 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮

---

**பராசரர் :—** புண்யமான ஸ்நானங்கள் ஐந்து என மஹர்ஷிகள் சொல்லியுள்ளனர். அவை, ஆக்னேயம், வாருணம், ப்ராம்ஹம், வாயவ்யம், திவ்யம் எனபனவாம். விபூதியினல் செய்வது ஆக்னேய ஸ்நானமாம். ஜலத்தில் முழுகுவது வாருண ஸ்நானமாம். 'ஆபோஹிஷ்ட' என்ற மந்த்ரங்களால் செய்வது ப்ராஹ்ம ஸ்நானமாம். பசுவின் புழுதியால் செய்வது வாயவ்ய ஸ்நானமாம். வெயிலுடன் கூடிய மழையினுல் செய்யும் ஸ்நானம் திவ்ய ஸ்நானமாம். மனிதன் அதில் ஸ்நானம் செய்தால், கங்கையில் ஸ்நானம் செய்தவனுய் ஆகிருன்.

**தக்ஷர் :—** ஆக்னேயம், வாருணம், ப்ராம்ஹம், வாயவ்யம், திவ்யம் என்று ஐந்து ஸ்நானங்கள் புண்யமானவை என்று ஸ்வாயம்புவ மனு சொன்னுர்.

**வ்யாஸர் :—** சக்தியில்லாவிடில், சிரஸ்ஸை நனைக்காமல் ஸ்நானம் விதிக்கப்படுகிறது. அல்லது, ஈரமுள்ள வஸ்த்ரத்தினுல் அங்கங்களைத் துடைத்துக் கொள்ளுதல் என்ற காபில ஸ்நானமும் சொல்லப்பட்டுள்ளது. அதிலும் அசக்தி இருந்

𑌮𑌾𑌗𑍍𑌨𑍇𑌯 𑌮𑍁𑌦𑍍𑌦𑌿𑌷𑍍𑌟𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 । 𑌵𑌾𑌰𑍁𑌣𑌂 𑌯𑍌𑌗𑌿𑌕𑌂 𑌚𑍈𑌵 𑌷𑍋𑌢𑌾 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌮𑍍 । 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌤𑍁 𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌕𑍁𑌶𑍈𑌃 𑌸𑍋𑌦𑌕𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌭𑌿𑌃 ॥ 𑌆𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌭𑌸𑍍𑌮𑌨𑌾𑌽𑌽𑌪𑌾𑌦𑌮𑌸𑍍𑌤𑌕𑌾𑌦𑍍𑌦𑍇𑌹𑌧𑍂𑌲𑌨𑌮𑍍 । 𑌗𑌵𑌾𑌂 𑌹𑌿 𑌰𑌜𑌸𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥ 𑌯𑌤𑍍𑌤𑍁 𑌸𑌾𑌤𑌪𑌵𑌰𑍍𑌷𑍇𑌣 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌾𑌰𑍁𑌣𑌂 𑌚𑌾𑌵𑌗𑌾𑌹𑌸𑍍𑌤𑍁 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌵𑍇𑌦𑌨𑌮𑍍 ॥ 𑌯𑍌𑌗𑌿𑌕𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌯𑌦𑍍𑌯𑍋𑌗𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑌨𑌮𑍍 । 𑌆𑌤𑍍𑌮𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑌿𑌤𑌿 𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌸𑍇𑌵𑌿𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 ॥ 𑌮𑌨𑌶𑍍𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑌂 𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 । 𑌶𑌕𑍍𑌤𑌶𑍍𑌚𑍇𑌦𑍍𑌵𑌾𑌰𑍁𑌣𑌂 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌮𑍇𑌵 𑌚' 𑌇𑌤𑌿 ॥

𑌗𑌰𑍍𑌗𑌃—

𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯 𑌮𑌾𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌂 𑌤𑌥𑌾 ।

---

தால், ப்ராம்ஹம் முதலிய ஸ்நானங்களைப் புததிமான்கள் சொல்லுகின்றனர். ப்ராம்ஹம், ஆக்னேயம், வாயவ்யம், திவ்யம், வாருணம், யௌகிகம் என்ற இவை கௌணஸ்நானங்களெனப்படும். மந்த்ரங்களுடன் குசோதங்களால் துடைத்துக் கொள்வது ப்ராம்ஹ ஸ்நானம். விபூதியால் கால் முதல் தலை வரையில் தேஹத்தைப் பூசிக்கொள்வது ஆக்னேய ஸ்நானம். பசுக்களின் புழுதியால் செய்யும் ஸ்நானம் வாயவ்ய ஸ்நானம் எனப்படும். இது சிறந்தது. வெயிலுடன் கூடிய மழையினால் செய்யும் ஸ்நானம் திவ்ய ஸ்நானம் எனப்படுகிறது. ஜலத்தில் முழுகுவது வாருண ஸ்நானம் எனப்படுகிறது. ஆத்ம த்யானம் செய்வது மானஸ ஸ்நானம் எனப்படுகிறது. யோகத்தில் விஷ்ணுவை த்யானித்தல் யௌகிக ஸ்நானம் எனப்படுகிறது. இது ஆத்ம தீர்த்தம என ப்ரஸித்தமாகியது. பிரம்ஹவாதிகளால் ஸேவிக்கப்பட்டது. மனிதருக்கு மனச்சுத்தியைச் செய்வதாகும். நித்யமும் அந்த ஸ்நானத்தைச் செய்யவேண்டும். சக்தியுள்ளவனாகில், அறிந்தவன் வாருண ஸ்நானத்தைச் செய்யவேண்டும். அசுத்தி ஏற்பட்டாலும் அதைச் செய்யவேண்டும்.

**கர்க்கர் :—** திவ்யம், வாயவ்யம், ஆக்னேயம், ப்ராம்ஹம்,

மானஸம் சேதி விஜ்ஞேயம் கௌணஸ்நானம் து ஷட்விதம்' இதி ॥

யோகயாஜ்ஞவல்க்ய:—

'அஸாமர்த்யாச்சரீரஸ்ய காலதேஶாத்யபேக்ஷயா ।
மந்த்ரஸ்நாநாதிகாந் ஸப்த கேசிதிச்சந்தி ஸூரய: ॥ மந்த்ரம் பௌமம் ததாऽऽக்நேயம் வாயவ்யம் திவ்யமேவ ச । வாருணம் மானஸம் சேதி ஸப்த ஸ்நாநாந்யநுக்ரமாத் ॥ ஆபோஹிஷ்டாதிபிர்மந்த்ரம் ம்ருதாலம்பஸ்து பார்திவம் । வாருணம் சாவகாஹஸ்து மானஸம் விஷ்ணுசிந்தநம் ॥ மானஸம் ப்ரவரம் ஸ்நாநம் ஸர்வே ஶம்ஸந்தி ஸூரய: । ஆத்மதீர்த்தப்ரஶம்ஸாயாம் வ்யாஸேந படிதம் யத:' இதி ॥

ஸ்ம்ருதிரத்நே—

'சதுர்புஜம் மஹாதேவம் ஶங்கசக்ரகதாதரம் । மந ஸா த்யாயதே விஷ்ணும் மானஸம் ஸ்நாந முச்யதே ॥ காய

---

ஸாரஸ்வதம், மானஸம் என்று கௌண ஸ்நானம் ஆறுவிதம் என்று அறியத் தகுந்தது.

**யோகயாக்ஞவல்க்யர்** :— சரீரத்தில் சக்தியின்மையாலும், காலம், சகதி முதலியவைகளை அபேக்ஷித்தும் மந்த்ர ஸ்நானம் முதலிய ஏழுஸ்நானபேதங்களை வித்வான்கள் விரும்புகின்றனர். அவை மாந்த்ரம், பௌமம், ஆக்னேயம் வாயவ்யம், திவ்யம், வாருணம், மானஸம் என்று ஏழு ஸ்நானங்கள். 'ஆபோஹி' என்பது முதலிய மந்த்ரங்களால் செய்யும் ஸ்நானம் மந்த்ரஸ்நானமாம். ம்ருத்திகையினுல் தேஹத்தைப்பூசிகொள்வது பார்த்திவஸ்நானமாம். ஜலத்தில் முழுகுவது வாருணஸ்நானமாம். விஷ்ணுவை த்யானித்தல் மானஸஸ்நானமாம். அறிந்தவர் எல்லோரும் மானஸஸ்நானத்தைச் சிறந்ததெனப் புகழ்கின்றனர். ஏனெனில், ஆத்மதீர்த்தத்தை ஸ்துதிக்குமிடத்தில் வ்யாஸர் படித்திருப்பதால்.

**ஸ்ம்ருதிரத்னத்தில்** :— சதுர்ப்புஜனும், பெரியதேவனும், சங்க சக்ர கதைகளைத்தரித்தவனுமாகிய விஷ்ணுவை மனதினுல் த்யானிப்பது மானஸஸ்நானம் என்று சொல்லப்படுகிறது. காயத்ரியால் ஜலத்தை எடுத்து, பத்து முறை அபிமந்த்ரித்து, அந்த

𑌤𑍍𑌰𑍍𑌯𑌾 𑌜𑌲𑌮𑌾𑌦𑌾𑌯 𑌦𑌶𑌕𑍃𑌤𑍍𑌵𑍋𑌽𑌭𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯 𑌚 । 𑌶𑌿𑌰𑌸𑍍𑌯𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌯𑍇𑌤𑍍𑌤𑍇𑌨 𑌵𑌾𑌰𑌿𑌣𑌾 ॥ 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑌕𑌂 𑌨𑌾𑌮 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌪𑍍𑌰𑌣𑌾𑌶𑌨𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃—

'𑌤𑍃𑌚𑌾𑌭𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌤𑌂 𑌤𑍋𑌯𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌯𑍇𑌨𑍍𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 । 𑌅𑌨𑍁𑌕𑌲𑍍𑌪𑌮𑌿𑌦𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑌹𑌰𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌦𑌕𑍍𑌷𑌃—

'𑌆𑌗𑍍𑌨𑍇𑌯𑌂 𑌵𑌾𑌰𑍁𑌣𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍇𑌵 𑌚 । 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌂 𑌚𑍈𑌵 𑌅𑌷𑍍𑌟𑌮𑌂 𑌕𑌾𑌪𑌿𑌲𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌂 𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌨𑌵𑌮𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌤𑌤𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍇𑌯𑌸𑍍𑌨𑌾𑌨𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌮𑌾𑌹, 𑌭𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌃—

'𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌶𑍍𑌚𑌰𑌣𑍌 𑌹𑌸𑍍𑌤𑍌 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑍍𑌯𑌾𑌚𑌮𑍍𑌯 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌤𑍍 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑌾𑌯𑌮𑍍𑌯 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌭𑌸𑍍𑌮𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ॥ 𑌆𑌦𑌾𑌯 𑌭𑌸𑌿𑌤𑌂 𑌶𑍍𑌵𑍇𑌤𑌮𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 । 𑌈𑌶𑌾𑌨𑍇𑌨 𑌤𑍁 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌿 𑌵𑌿𑌨𑌿𑌕𑍍𑌷𑌿𑌪𑍇𑌤𑍍 ॥ 𑌤𑌤 𑌆𑌦𑌾𑌯

---

ஜலத்தால் சிரஸ்ஸிலும் எல்லா அங்கங்களிலும் ப்ரோக்ஷித்துக் கொள்ளவேண்டும். இது ஸகலபாபங்களையுமகற்றும் காயத்ர ஸ்நானம் எனப்படும்.

**விஷ்ணு**:— (ஆபோஹிஷ்ட முதலிய) மூன்று ருக்குகளால் அபிமந்திரிக்கப்பட்ட ஜலத்தைத் தலையிலும் அங்கங்களிலும் ப்ரோக்ஷித்துக்கொள்ளவேண்டும். இது மனிதரின் ஸகலபாபங்களையும் ஹரிக்கும் அநுகல்பஸ்நானமாம்.

**தக்ஷர்**:— ஆக்னேயம், வாருணம், ப்ராம்ஹம், வாயவ்யம், திவ்யம், மானஸம், பார்த்திவம், என்று ஏழு ஸ்நானங்கள். எட்டாவது காபிலம், ஒன்பதாவது ஸாரஸ்வத ஸ்நானம். இது சிறந்தது. அவைகளுள் ஆக்னேயஸ்நானத்தைச் சொல்லுகிறார்,

**பரத்வாஜர்**:—கால் கைகளை அலம்பி, கிழக்கு முகமாய் முன்போல் ஆசமனம் செய்து, ப்ராணாயாமம் செய்து, ஸங்கல்ப்பித்து, பஸ்மஸ்நானத்தைச் செய்யவேண்டும். அக்னிஹோத்ரத்திலுண்டாகிய, வெண்ணிறமுள்ளதுமான பஸ்மத்தை

𑌤𑌦𑍍𑌵𑌨𑍍𑌮𑍁𑌖𑍇 𑌤𑌤𑍍𑌪𑍁𑌰𑍁𑌷𑍇𑌣 𑌤𑍁 । 𑌅𑌘𑍋𑌰𑌾𑌖𑍍𑌯𑍇𑌨
𑌹𑍃𑌦𑌯𑍇 𑌗𑍁𑌹𑍍𑌯𑍇 𑌵𑌾𑌮𑌾𑌹𑍍𑌵𑌯𑍇𑌨 𑌚 ॥ 𑌸𑌦𑍍𑌯𑍋𑌜𑌾𑌤𑌾𑌭𑌿𑌧𑌾-
𑌨𑍇𑌨 𑌭𑌸𑍍𑌮 𑌪𑌾𑌦𑌯𑍁𑌗𑍇 𑌕𑍍𑌷𑌿𑌪𑍇𑌤𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌂 𑌪𑍍𑌰𑌣𑌵𑍇-
𑌨𑍈𑌵 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣𑍋𑌦𑍍𑌧𑍂𑌳𑌯𑍇𑌤𑍍𑌤𑌤𑌃 ॥ 𑌏𑌤𑌦𑌾𑌗𑍍𑌨𑍇𑌯𑌕𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨-
𑌮𑍁𑌦𑌿𑌤𑌂 𑌪𑌰𑌮𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 । 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑌾-
𑌦𑌾𑌵𑌿𑌦𑌂 𑌬𑍁𑌧𑌃’ 𑌇𑌤𑌿 ॥

𑌆𑌪𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑍋𑌽𑌪𑌿 —

‘𑌭𑌸𑍍𑌮 𑌸𑍍𑌯𑌾𑌦𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌾𑌗𑍍𑌨𑍇𑌰𑌾𑌵𑌸𑌥𑍍𑌯𑌾𑌦𑌥𑌾𑌪𑌿 𑌵𑌾 ।
𑌅𑌭𑌾𑌵𑍇 𑌤𑍍𑌵𑌨𑌯𑍋𑌰𑍍𑌭𑍂𑌯𑌃 𑌸𑍍𑌵𑌗𑍃𑌹𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑍇𑌰𑌥𑌾𑌪𑌿 𑌵𑌾 ॥
𑌭𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌯 𑌵𑌿𑌧𑌿𑌵𑌤𑍍 𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑌾𑌗𑍍𑌨𑍇𑌯𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 । 𑌭𑌸𑍍𑌮 [illegible]
𑌕𑌰𑍇 𑌵𑌾𑌮𑍇 [illegible] ॥ 𑌸𑍌𑌵𑌰𑍍𑌣𑍇-
𑌰𑌾𑌜𑌤𑍇 𑌵𑌾𑌽𑌪𑌿 𑌤𑌾𑌮𑍍𑌰𑍇 𑌵𑌾 𑌪𑌾𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍇𑌽𑌪𑌿 𑌵𑌾 । 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿-
𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑍇𑌨 𑌤𑌥𑍈𑌵 𑌚 ॥ 𑌷𑌡𑍍𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃
[illegible] । 𑌈𑌶𑌾𑌨𑌾𑌦𑍍𑌯𑍈𑌃
𑌪𑌞𑍍𑌚𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌕𑍍𑌰𑌮𑌾𑌦𑍁𑌦𑍍𑌧𑍂𑌳𑌯𑍇𑌤𑍍𑌤𑌤𑌃’ 𑌇𑌤𑌿 ॥

---

எடுத்து, ஈசான மந்த்ரத்தால் சிரஸ்ஸிலும் தத்புருஷ மந்த்ரத்தால், முகத்திலும், அகோரமந்த்ரத்தால் மார்பிலும், வாமதேவ மந்த்ரத்தால் குஹ்யத்திலும், ஸத்யோஜாத மந்த்ரத்தால் பாதங்களிலும் தரிக்கவேண்டும். ப்ரணவ மந்த்ரத்தால் ஸர்வாங்கத்திலும் உத்தூளனம் செய்து கொள்ளவேண்டும், இது ஆக்னேய ஸ்நானம், பெரிய முனிவர்களால் சொல்லப்பட்டது. எல்லாக்கர்மங்களும் குறைவிலாதிருப்பதற்காக ஆதியில் இதைச் செய்யவேண்டும், அறிந்தவன்.

**ஆபஸ்தம்பரும்** :— பஸ்மமானது அக்னிஹோத்ராக்னியிலிருந்து உண்டாகியதாகும், அல்லது, ஆவஸத்யாக்னியினுடையதாயிருக்கலாம். இவ்விரண்டுமில்லாவிடில், தனது ஔபாஸனாக்னியினுடையதாயிருக்கலாம் ப்ராம்ஹணன் பஸ்மத்தை க்ரஹித்து விதிப்படி ஆக்னேயஸ்நானத்தை அனுஷ்டிக்க வேண்டும். முன் சொல்லிய விதிப்படியுள்ள பஸ்மத்தை க்ரஹித்து, இடது கையிலாவது, ஸ்வர்ணம், வெள்ளி, தாம்ரமான பாத்ரத்திலாவது, வேறு பாத்ரத்திலாவது வைத்து, ‘அக்னிரிதி’ முதலான ஆறு மந்த்ரங்களையும், ப்ரணவத்தையும் ஜபித்து, ஈசானாதிகளான ஐந்து

अग्निरित्यादयो मन्त्रा अथर्वशिरसि स्थिताः - 'अग्निरिति भस्म, वायुरिति भस्म, जलमिति भस्म, स्थलमिति भस्म, व्योमेति भस्म, सर्वं ह वा इदं भस्म' इति । अथर्वशिरः ॥

लिङ्गपुराणेऽपि—

'ईशानेन शिरोदेशं मुखं तत्पुरुषेण तु । उरोदेशमघोरेण गुह्यं वामेन सुव्रत ॥ सद्येन पादौ सर्वाङ्गं प्रणवेन विशोधयेत् । अतिपातकयुक्तोऽपि मृत्युकालेऽपि यो द्विजः ॥ भस्मस्नायी भवेच्चेत् सद्यः पापैः प्रमुच्यते' इति ॥

स्मृतिसारसमुच्चये—

'त्र्यायुषेणैव मन्त्रेण शकृद्भस्मविलेपनम् । शिरःप्रभृति यत्पादं भस्मस्नानं तदुच्यते' इति ॥

वारुणस्नानमाह व्यासः—

'स्नानमब्दैवतैर्मन्त्रैर्जले मज्जनमाहृतेः ।

மந்த்ரங்களால், முறையே சிரஸ், முகம், மார்பு, குஹ்யம், பாதங்கள் இவைகளில் உத்தூளனம் செய்யவேண்டும். அகனிரித்யாதி மந்த்ரங்கள் அதர்வ சிரத்தில் சொல்லப்பட்டுள்ளன.

**லிங்க புராணத்திலும்:**— ஈசான மந்த்ரத்தால் சிரஸ்ஸையும், தத்புருஷ மந்த்ரத்தால் முகத்தையும, அகோர மந்த்ரத்தால் மார்பையும், வாமதேவ மந்த்ரத்தால் குஹ்யத்தையும், ஸத்யோஜாத மந்த்ரத்தால் கால்களையும, ப்ரணவத்தால் ஸர்வாங்கத்தையும் சுத்தம் செய்யவேண்டும். அதிகபாபம் செய்தவனாயினும் எந்த ப்ராம்ஹணன் மரணகாலத்திலாவது இவ்விதம் பஸ்மஸ்நானம் செய்கின்றானோ அவன் உடனே பாபங்களால் விடப்படுகின்றான்.

**ஸ்ம்ருதிஸாரஸமுச்சயத்தில்:**— த்ராயுஷ மந்த்ரங்களால் பசுவின் சக்ருத்தாலுண்டாகிய பஸ்மத்தால் தலை முதல் கால்வரையில் பூசிக்கொள்வது எதுவோ, அது புண்யமான பஸ்மஸ்நானம் எனப்படுகிறது.

வாருணஸ்நானத்தைச் சொல்லுகிறார்,

**வ்யாஸர்:**— ஜலதேவதாகமான மந்த்ரங்களுடன் ஜலத்தில்

தர்பணம் பித்ருதேவாநாம் ஸ்நாநம் வாருணமுச்யதே' இதி ‖

போதாயந: —

'அவகாஹநம் ஸ்நாநம் வாருணம் ஸார்வவர்ணிகம் |
மந்த்ரவத் ப்ரோக்ஷணம் சாபி த்விஜாதீநாம் விசிஷ்யதே' இதி ‖

ப்ராஹ்மஸ்நாநப்ரகாரமாஹ காத்யாயந: — 'ஆபோஹிஷ்டாதிபிர்ப்ராஹ்மம் மந்த்ரஸ்நாநம் ஹி தத்ஸ்ம்ருதம் | குசாக்ரைர்மார்ஜநம் குர்யாத் தேவதீர்த்தேந வா த்விஜ: ‖ ருகந்தே மார்ஜநம் குர்யாத் பாதாந்தே வா ஸமாஹித: | த்ருசஸ்யாந்தேऽதவா குர்யாச் சிஷ்டாநாம் மதமீத்ருசம்' இதி ‖

பாதாந்தமார்ஜநப்ரகாரமாஹ ப்ரஹ்மா —

'நவபி: மந்த்ரபாதைஸ் ததா(அ)ர்தகைஸ் மந்த்ரார்த்தகைஸ் ததா

முழுகி, பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணம் செய்வது வாருணஸ்நானம் எனப்படுகிறது

**போதாயனர்:**— ஜலத்தில் முழுகுவது வாருணஸ்நானம். இது எல்லாவர்ணத்தாருக்கும் உரியது. மந்த்ரங்களுடன் ப்ரோக்ஷணமும் செய்து கொள்வதென்பது, முதல் மூன்று வர்ணத்தாருககுமட்டில்.

ப்ராம்ஹஸ்நானப்ரகாரத்தைச் சொல்லுகிறார்,

**காத்யாயனர்:**—'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்களால் செய்யப்படும் ஸ்நானம் ப்ராம்ஹஸ்நானம். அதுவே மந்த்ர ஸ்நானமெனப்படும். ப்ராமஹ்ணன், குசங்களின் நுனிகளாலாவது, தேவதீர்த்தத்தாலாவது மார்ஜனம் செய்து கொள்ள வேண்டும். கவன முடையவனாய் ருக்கின் முடிவிலாவது, பாதத்தின் முடிவிலாவது, மூன்று ருக்குகளின் முடிவிலாவது மார்ஜனம் செய்து கொள்ளவேண்டும். இவ்விதம் சிஷ்டர்களின்கொள்கை.

பாதத்தின் முடிவில் மார்ஜனம் செய்வதின் ப்ரகாரத்தைச் சொல்லுகிறார்,

**ப்ரஹ்மா:**— மூன்று ருக்குகளின் ஒன்பது பாதங்களாலும், முறையே, பாதங்களிலும் சிரஸ்ஸிலும் மார்பிலும், சிரஸ்ஸிலும் மார்பிலும் பாதங்களிலும், மார்பிலும் பாதங்களிலும்

மார்ஷ்டி । குசாக்ரே மார்ஷ்டி மூர்த்நி ருசா மந்த்ரஸ்நானம் விதீயதே' இதி ॥ மார்ஷ்டி = பாதயோ: । குசாக்ரே = மூர்த்நி ॥

ப்ரகாராந்தரமுக்தம் ஸ்ம்ருத்யந்தரே—

‘ஆபோஹிஷ்டாத்ய்ருக்பிஸ்திஸ்ருபி: குசோதகைர்மார்ஷ்டி த்ர்யசேன ச । பாதார்த்தர்சம் க்ருத்ஸ்னயா ர்சா தைவதீர்த்தேன வா த்விஜ: ॥ பாதாதௌ ப்ரணவம் குர்யாத் அர்த்தர்சாதௌ ததைவ ச । ருசாதௌ ப்ரணவம் குர்யாத் மந்த்ரஸ்நானே விசேஷத:' இதி ॥

க்ருஹ்யபரிசிஷ்டே—

‘அதாசக்தஸ்ய ஸ்நானம் மந்த்ரை: சுசௌ தேசே சுசிராசாந்த: ப்ராணானாயம்ய தர்ப்பபாணிஸ்திஸ்ருபிராபோஹிஷ்டீயாபி: பத்: ப்ரணவபூர்வம் பாதசோ நவஸ்தானேஷு மார்ஜயேத் ॥ பாதயோர்மூர்த்நி ஹ்ருதயே, மூர்த்நி ஹ்ருதயே

---

சிரஸ்ஸிலும் ப்ரோக்ஷித்துககொள்வது மந்த்ர ஸ்நானமென்று விதிக்கப்படுகிறது. வேறு ப்ரகாரமும,

**மற்றொரு ஸ்ம்ருதியில்:—** ஆபோஹிஷ்ட முதலிய மூன்று ருக்குகளை, பாதம பாதமாகவும, பாதி ருக்காகவும், முழு ருக்காகவும் உச்சரித்துக குசங்களின் நுனிகளால் மார்ஜனம் செய்ய வேண்டும். தேவதீர்த்தத்தாலாவது செய்யலாம். இந்த மந்த்ர ஸ்நானத்தில் விசேஷமாய் ஒவ்வொரு பாதத்திலும் முதலில் ப்ரணவத்தைச சேர்ககவும. பாதி ருககுகளின் முதலிலும் சேர்க்கவும். ருக்கின் ஆதியிலும் சேர்க்கவும்.

**க்ருஹ்ய பரிசிஷ்டத்திலும் :—** இனி, அசக்தனுக்கு மந்த்ர ஸ்நானம் சொல்லப்படுகிறது. சுத்தமானஸ்தலத்தில், சுத்தனாய் ஆசமனம் செய்து ப்ராணாயாமம் செய்து, தர்ப்பத்தைக் கையிலுடையவனாய் ‘ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால் பாதம் பாதமாய்,ப்ரணவபூர்வமாய் தர்ப்ப ஜலங்களால் முறையே 9-ஸ்தானங்களில் மார்ஜனம் செய்து கொள்ளவேண்டும். பாதங்களிலும் சிரஸ்ஸிலும் மார்பிலும், சிரஸ்ஸிலும் மார்பிலும் பாதங்களிலும, பாதங்களிலும் மார்பிலும் சிரஸ்ஸிலும், பிறகு, பாதி ருககாகப்பிரித்து, சிரஸ்ஸிலும் மார்பிலும், பாதங்களிலும் மார்பிலும், பாதங்களிலும் சிரஸ்ஸிலும், பிறகு, ருக்காகவே உச்சரித்து ஒரு ருக்குக்கு.ஒரு முறையாய்,

𑌪𑌾𑌦𑌯𑍋𑌃, 𑌪𑌾𑌦𑌯𑍋 𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌚 । 𑌋𑌗𑌰𑍍𑌧𑌰𑍍𑌚𑌶𑍋 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿, 𑌪𑌾𑌦𑌯𑍋 𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿, 𑌪𑌾𑌦𑌯𑍋 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌚 । 𑌋𑌗𑍍 𑌦𑍍𑌵𑌯𑍋𑌰𑍍𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿 𑌪𑌾𑌦𑌯𑍋 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌚 । 𑌋𑌕𑍍 𑌤𑍃𑌚𑍇𑌨 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌮𑌾𑌰𑍍𑌜𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾 𑌦𑌶𑌧𑌾𑌽𑌭𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌤𑌾 𑌅𑌪𑌃 𑌪𑍍𑌰𑌣𑌵𑍇𑌨 𑌪𑍀𑌤𑍍𑌵𑌾 𑌦𑍍𑌵𑌿𑌰𑌾𑌚𑌾𑌮𑍇𑌦𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑌨𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌯𑍋𑌗𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑌃 —

'𑌶𑌨𑍍𑌨𑌾𑌪𑌸𑍍 𑌦𑍍𑌰𑍁𑌪𑌦𑌾 𑌆𑌪𑍋𑌹𑌿𑌷𑍍𑌠𑌾𑌽𑌘𑌮𑌰𑍍𑌷𑌣𑌮𑍍 । 𑌏𑌤𑍈𑌶𑍍𑌚 𑌪𑌞𑍍𑌚𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌨𑌾𑌨𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑍇 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌃 —

'𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌂 𑌗𑍋𑌰𑌜𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌮𑌸𑍍𑌤𑌂 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌗𑍋𑌪𑌤𑍌 । 𑌵𑌿𑌦𑍍𑌵𑌤𑍍𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑍀𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥ 𑌗𑍋𑌪𑌤𑍌 = 𑌸𑍂𑌰𑍍𑌯𑍇 । 𑌵𑌿𑌦𑍁𑌷𑌾𑌂 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 = 𑌵𑌾𑌣𑍀 । 𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌸𑌾𑌰𑌸𑍍𑌵𑌤𑌮𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌤𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌾𑌹 𑌵𑍍𑌯𑌾𑌸𑌃 —

'𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑍋𑌪𑌸𑌨𑍍𑌨𑌾𑌯 𑌵𑌿𑌨𑌯𑍇𑌨 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌤𑌯𑍇 । 𑌤𑌜𑍍𑌜𑍍𑌞

---

மாபிலும், பாதங்களிலும், சிரஸ்ஸிலும் மார்ஜனம் செய்யவும். பிறகு மூன்று ருக்குகளையும் ஜபித்து ஒரு முறை சிரஸ்ஸில் மார்ஜனம் செய்து கொள்ளவும். பிறகு, பத்துத்தடவை காயத்ரியால் அபிமந்திரிககப்பட்ட ஜலத்தை ப்ரணவத்தால் பருகி, இரண்டு முறை ஆசமனம் செய்யவேண்டும. இவ்விதம் உள்ளது மந்த்ர ஸ்நானமாம்.

**யோகயாக்ஞவல்க்யரோவெனில்** :— "*சந்ந ஆப:, த்ருபதா, ஆபோஹிஷ்டா, அகமர்ஷணம என்ற இவ்வைந்து மந்த்ரங்களாலும் செய்யப்படுவது மந்த்ர ஸ்நானம்" என்கிறார்.*

*வாயவ்ய ஸாரஸ்வத ஸ்நானங்களைச் சொல்லுகிறார்,*

**ப்ருஹஸ்பதி** :— *ஸூர்யன் அஸ்தமயத்தை அடையும் பொழுது, பசுவின் புழுதியால் செய்வது வாயவ்யஸ்நானம். வித்வான்களின் வாக்கினல் அடையப்பட்டது ஸாரஸ்வதஸ்நானம் என்று சொல்லப்பட்டுளளது. அதன் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்,*

**வ்யாஸர்** :— *தானாகவே ஸமீபத்தில் வந்தவனும், வணக்க*

[illegible]

[illegible]

முடையவனும், சிஷ்யன் அல்லது புத்ரனுமான ப்ராம்ஹணனுக்கு, அந்த ஸ்நான விதியைத் தெரிந்தவனான ப்ராம்ஹணன் ஸ்நானத்தைச் செய்விக்கவேண்டும். அதன் மந்த்ரங்கள் —'தாக்ஷாயணமயை: + அச்சித்ரமஸ்து' என்றவை. இவற்றின் பொருள்—'ஸ்வர்ணமயமான குடங்களாலும் மந்த்ரத்துடன் கூடிய ஜலங்களாலும் மங்களம் புண்யாஹமிவைகளாலும், ஸ்நானத்தை விரும்பியவர்க்கு ஸ்நானமிருக்கக் கடவது.. முதலில் மிகுந்த குணங்களையுடைய ஜலத்தையுடைய ப்ரபாஸத்திலும், மத்யமான புஷ்கரத்திலும், கங்காத்வாரத்திலும், கனகலத்துடன் கூடிய ப்ரயாகத்திலும், கோகர்ணத்திலும், கயையிலும், சந்த்ரன் ராகுவினால் பிடிக்கப்பட்டிருக்கும்போதும், ஸூர்ய க்ரஹணத்திலும், குழந்தையைவிடப் பேதமில்லாததால், இவனுக்கு ப்ரஸித்தங்களும், மூன்றுலகங்களாலும் அறியப்பட்டவையுமான இவைகளால் குறைவிலாத ஸ்நானமுண்டாகக் கடவது' என்பது. இந்த ஸாரஸ்வத தீர்த்தத்தை அடைந்து ஸந்துஷ்ட சித்தனாய் ஆகவேண்டும். ஸர்வதீர்த்தங்களிலும ஸ்நானம் செய்வதைவிட வித்வான்களின் வசனம் சுத்தமானதல்லவா.

**வ்யாஸர்:**— சுத்தமான ஸ்தலத்திலிருந்து ம்ருத்தை க்ரஹித்து, பூதேவதாகமான மந்த்ரங்களால் தேஹத்தில் பூசிக்கொள்ள

𑌵𑌨𑌮𑍍 । 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑍈𑌰𑍇𑌤𑌤𑍍 𑌮𑍃𑌣𑍍𑌮𑌯𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌤𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇' ॥ 𑌮𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑍇 𑌹𑌨 𑌮𑍇 𑌪𑌾𑌪𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌦𑌯𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵𑌸𑌂𑌯𑍁𑌕𑍍𑌤𑌾 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃 ॥ '𑌗𑍋𑌪𑌾𑌦𑌰𑌜 𑌆𑌦𑌾𑌯 𑌗𑍋𑌸𑌾𑌵𑌿𑌤𑍍𑌰𑍀𑌂 𑌜𑌪𑍇𑌦𑍍𑌬𑍁𑌧𑌃 । 𑌗𑌾𑌤𑍍𑌰𑍇𑌷𑍍𑌵𑌥 𑌤𑌦𑌾𑌵𑌿𑌧𑍍𑌯 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌉𑌤𑍍𑌤𑌰𑌾𑌯𑌣𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑍁 𑌯𑌦𑌾 𑌵𑌰𑍍𑌷𑌤𑌿 𑌵𑌾𑌸𑌵𑌃 । 𑌆𑌤𑌪𑍇𑌨 𑌸𑌹 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌂 𑌤𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 𑌹𑍃𑌤𑍍𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌰𑌵𑌿𑌮𑌣𑍍𑌡𑌲𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍍 । 𑌨𑍀𑌲𑌜𑍀𑌮𑍂𑌤𑌸𑌂𑌕𑌾𑌶𑌂 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌭𑍁𑌜𑌮𑍍 ॥ 𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌪𑌦𑍍𑌮𑌧𑌾𑌰𑌿𑌣𑌂 𑌵𑌨𑌮𑌾𑌲𑌿𑌨𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑌜𑌾𑌂 𑌧𑌾𑌰𑌾𑌂 𑌨𑌿𑌪𑌤𑌨𑍍𑌤𑍀𑌂 𑌸𑍍𑌵𑌮𑍂𑌰𑍍𑌧𑌨𑌿 ॥ 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑍇𑌣 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌨𑍍𑌤𑍀𑌂 𑌸𑍍𑌵𑌕𑌾𑌂 𑌤𑌨𑍁𑌮𑍍 । 𑌤𑌯𑌾 𑌪𑍍𑌰𑌕𑍍𑌷𑌾𑌲𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌦𑍇𑌹𑌂 𑌪𑌰𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥ 𑌇𑌦𑌂 𑌸𑍍𑌨𑌾𑌨𑌵𑌰𑌂 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌨𑌾𑌨𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌧𑌿𑌕𑌂 𑌮𑌤𑌮𑍍 । 𑌅𑌨𑍇𑌨 𑌸𑍍𑌨𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍈𑌃 𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇' 𑌇𑌤𑌿 ॥

---

வேண்டும். 'ம்ருத்திகேஹநமேபாபம' என்பது முதலியவை பார்த்திவஸம்யுக்த மந்த்ரங்களாம். பசுவின் குளம்பிலிருந்து தூளியை எடுத்து கோஸாவித்ரியை ஜபிக்க வேண்டும். அறிந்தவன் பிறகு அந்தத் தூளியை அங்கங்களில் பூசிக்கொண்டால், அது வாயவ்யஸ்நானம் எனச் சொல்லப்படுகிறது. உத்தராயணத்தில் வெயிலுடன் மழை பொழியும்போது, அதனால் ஸ்நானம் செய்வது திவ்யஸ்நானம் எனப்படுகிறது. ஸகல ப்ராணிகளின் ஹ்ருதயத்திலிருப்பவனும், ஸூர்யமண்டலத்திலிருப்பவனும், கருமேகம் போன்றவனும், நான்கு கைகளுடையவனும், சங்கம், சக்ரம், கதை, பத்மம் இவைகளைத் தரித்தவனும், வனமாலையணிந்தவனுமான வாஸுதேவனை த்யானித்து, அவனது பாதத்தினின்று பெருகும் ஜலத்தின் தாரை, தனது சிரஸ்ஸில் விழுந்து, ப்ரம்ஹரந்த்ரத்தின் வழியாய் தன் சரீரத்திற்குள் நுழைவதாய் த்யானிக்கவேண்டும். அந்தத் தாரையால் தன் தேஹம் முழுவதும் அலம்பப்பட்டதாய் த்யானிக்கவேண்டும். சிறந்ததான இந்த ஸ்நானம், ஆயிரம் மந்த்ரஸ்நானத்தைவிட அதிகமென மதிக்கப்பட்டது. இவ்விதம் ஸ்நானம் செய்தால் எல்லாப்பாபங்களாலும் அவச்யம் விடுபடுவான்.

கௌர்மபுராணே—

'அஶுசிஶ்சேத் ஸமர்த்தோ ஹி ஸ்நாநமேவ ஸமாசரேத் ।
ப்ராஹ்மாதீந்யப்யஶக்தௌ து ஸ்நாநாந்யாஹுர்மநீஷிண:'
இதி ॥

ஜாபாலி:—

'அஶிரஸ்கம் பவேத் ஸ்நாநம் ஸ்நாநாஶக்தௌ து கர்மிண: । தஸ்யாப்யஸாமர்த்யயோகே மந்த்ரஸ்நாநாதிகம் சரேத்'
இதி ॥

ஸ்ம்ருத்யந்தரே—

'அஸாமர்த்யாச்சரீரஸ்ய வைஷம்யாத்தேஶகாலயோ: ।
ஸ்நாநாந்யேதாநி துல்யாநி வாருணேந பவந்தி ஹி' இதி ॥

மநு:—

'ப்ரபு: ப்ரதமகல்பஸ்ய யோऽநுகல்பேந வர்ததே । ந ஸாம்பராயிகம் தஸ்ய துர்மதேர்வித்யதே பலம்'
இதி ॥ ஸாம்பராயிகம் = ஆமுஷ்மிகம் ॥

இதி கௌணஸ்நாநாநி ॥

---

**கூர்ம புராணத்தில்:**— அசுத்திஏற்பட்டால் வாருணஸ்நானத்தையே செய்யவேண்டும். அதில் சக்தியில்லாவிடில் ப்ராம்ஹாதி ஸ்நானங்களை விதவான்கள் சொல்லுகின்றனர்.

**ஜாபாலி:**—கர்மத்தை அனுஷ்டிப்பவனுக்கு வாருண ஸ்நானத்தில் சக்தி இல்லாவிடில் தலையை முழுக்காமல் கழுத்துவரையில் நனைத்து ஸ்நானம் செய்யவேண்டும் அதிலும் சக்தியில்லாவிடில் மந்த்ர ஸ்நானம் முதலியதைச் செய்யவும்.

**மற்றொரு ஸ்ம்ருதியில்:**— சரீரத்தின் ஸாமர்த்யமின்மையாலும், தேசகாலங்களின் ஒற்றுமையில்லாததாலும், இந்த ஸ்நானங்களும் வாருண ஸ்நானத்திற்குச் சமமாய் ஆகின்றன.

**மனு:**— முக்ய கல்பத்தை அனுஷ்டிப்பதற்குச் சக்தனயிருந்தும் எவன் அனுகல்பத்தில் ப்ரவர்த்திக்கின்றானோ அந்தத் துர்ப்புத்திக்குப் பாரலௌகிகமான பலம் இல்லை.

கௌணஸ்நானம் முற்றிற்று.

## ஊர்த்⁴வபுண்ட்³ரதா⁴ரணவிதி⁴: ॥



அதோ²ர்த்⁴வபுண்ட்³ரதா⁴ரணவிதி⁴: ॥ தத்ர வாஸுதே³வோபநிஷத்—

‘ததோ கோ³பீசந்த³நம் நமஸ்க்ருத்யோத்³த்⁴ருத்ய, கோ³பீசந்த³ந பாபக்⁴ந விஷ்ணுதே³ஹஸமுத்³ப⁴வ । சக்ராங்கித நமஸ்துப்⁴யம் தா⁴ரணாந்முக்திதோ³ ப⁴வ ॥ இமம் மே க³ங்க³ இதி ஜலமாதா³ய விஷ்ணோர்நுகமிதி மர்த³யேத் । அதோ தே³வா அவந்து ந இத்யேதாபி⁴ர்ருக்³பி⁴ர்விஷ்ணுகா³யத்ர்யா ச த்ரிவாரமபி⁴மந்த்ர்ய, ஶங்க²சக்ரக³தா³பாணே த்³வாரகாநிலயாச்யுத । கோ³விந்த³ புண்ட³ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக³தம்’ இதி மாம் த்⁴யாத்வா க்³ருஹஸ்தோ² லலாடாதி³ஷு த்³வாத³ஶஸ்தா²நேஷ்வநாமிகாங்கு³ல்யா விஷ்ணுகா³யத்ர்யா கேஶவாதி³நாமபி⁴ர்வா தா⁴ரயேத் । ப்³ரஹ்மசாரீ வாநப்ரஸ்தோ² வா லலாடகண்ட²ஹ்ருத³யபா³ஹு

---

## ஊர்த்வ புண்ட்ர தாரண விதி.

இனி ஊர்த்வபுண்ட்ரத்தைத் தரிப்பதின் விதி சொல்லப்படுகிறது. அதில்,

**வாஸுதேவோபநிஷத் :—** பிறகு கோபீசந்தனத்தை நமஸ்கரித்து, எடுத்து ‘கோபீ சந்தன+முக்திதோபவ’ என்று ப்ரார்த்திக்கவும். இதன் பொருள்— ‘பாபத்தை அகற்றுவதும், விஷ்ணுதேஹத்திலுண்டாகியதும், சக்ரத்தால் அடையாளமிடப்பட்டதுமான ஓ கோபீசந்தன! உனக்கு நமஸ்காரம். உன்னைத்தரிப்பதால் முக்தியை அளிப்பாயாக’ என்பது, ‘இமம்மே கங்கே’ என்பதால் ஜலத்தை எடுத்து, ‘விஷ்ணோர்நுகம்’ என்பதால் தேய்க்கவேண்டும். ‘அதோதேவா:’ என்பது முதலிய ருக்குகளாலும், மூன்று தடவை விஷ்ணுகாயத்ரியாலும் அபிமந்த்ரித்து, ‘சங்க சக்ர+சரணாகதம்’ என்று என்னை (விஷ்ணுவை) த்யானித்து நெற்றி முதலிய 12–இடங்களில் அநாமிகாவிரலால், விஷ்ணுகாயத்ரியாலாவது, ‘கேசவ’ முதலிய 12–நாமங்களாலாவது க்ருஹஸ்தன் தரிக்கவும். ப்ரம்ஹசாரியாயினும், வானப்ரஸ்தனாயினும், நெற்றி, கழுத்து, மார்பு,

ऊर्ध्वं वैष्णव्या गायत्र्या कृष्णादिनामभिर्वा धारयेत्। यतिस्तर्जन्या शिरोललाटहृदयेषु प्रणवेन धारयेत्। परमहंसो ललाटे प्रणवेन एकमूर्ध्वपुण्ड्रं धारयेत्। तत्र दीपप्रकाशं स्वात्मानं 'ब्रह्माहमस्मि' इति भावयन् योगी सायुज्यमवाप्नोति॥ ऊर्ध्वदण्डोर्ध्वरेताश्च ऊर्ध्वपुण्ड्रोर्ध्वयोगवान्। ऊर्ध्वं पदमवाप्नोति यतिरूर्ध्वचतुष्कवान्॥ ब्राह्मणानां तु सर्वेषां वैदिकानामनुत्तमम्। गोपीचन्दनवारिभ्यामूर्ध्वपुण्ड्रं विधीयते॥ यो गोपीचन्दनाभावे तुलसीमूलमृत्तिकाम्। मुमुक्षुर्धारयेन्नित्यमपरोक्षात्मसिद्धये' इति॥

महोपनिषदि—

'ऊर्ध्वपुण्ड्रः परमेशितारं नारायणं

---

கைகளின் மேல்பாகம இவைகளில் விஷ்ணுகாயத்ரியாலாவது, 'க்ருஷ்ண' முதலிய ஐந்து நாமங்களாலாவது தரிக்கவேண்டும். யதி, தர்ஜனீ விரலால், தலை, நெற்றி, மார்பு இவைகளில் ப்ரணவத்தால் தரிக்கவும். பரமஹம்ஸன், நெற்றியில், ப்ரணவத்தால் ஒரு ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கவேண்டும். அதில் தீபம் போல் ப்ரகாசிக்கும் தன் ஆத்மாவை த்யானித்து 'ப்ரம்ஹாஹமஸ்மி' என்று பாவிப்பவனாகிய யோகீ எனது ஸாயுஜ்யத்தை அடைகிறான். தண்டம், ரேதஸ், புண்ட்ரம், யோகம் என்ற இந்த நான்கையும் ஊர்த்வமாய் உடைய யதி ஊர்த்வமான (உயர்ந்ததான) பதத்தை அடைகிறான். வைதிகரான ப்ராம்ஹணர் எல்லோருக்கும் கோபீசந்தனம் ஜலம் இவைகளால் ஊர்த்வ புண்ட்ரம் விதிக்கப்படுகிறது. எவன் முமுக்ஷுவோ அவன் கோபீசந்த்னம் இல்லாவிடில், துளஸியின் அடியிலுள்ள ம்ருத்திகையை, அபரோக்ஷாத்மக்ஞானஸித்திக்காகத் தரிக்கவேண்டும்.

**மஹோபநிஷத்தில் :—** மனிதன், ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவனாய், பரமேச்வரனும், ஸாங்க்ய யோக சாஸ்த்ரங்களால் அறியக்கூடியவனுமான நாராயணனை த்யானித்தால், ஸகல

𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌦𑍍𑌯𑍋 𑌮𑌾𑌯𑌿𑌮𑌧𑍍𑌯𑌗 | 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌮𑍁𑌚𑍍𑌯𑍇𑌤 𑌨𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌪𑌾𑌶𑍈𑌰𑌿𑌹𑍈𑌵𑍈𑌤𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌮𑍍' 𑌇𑌤𑌿 ||

𑌕𑌠𑌶𑌾𑌖𑌾𑌯𑌾𑌮𑌪𑌿—

'𑌯𑌸𑍍𑌤𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑍋 𑌯𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑌹𑌸𑍍𑌤𑌮𑍀𑌶𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌪𑌰𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑌤𑌿 𑌯𑍋 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 | 𑌸𑍍𑌵𑌰𑍇𑌣 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿𑌸𑍍𑌥𑌂 𑌪𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌂 𑌯𑍋 𑌮𑌹𑌤𑍋 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍' 𑌇𑌤𑌿 ||

𑌆𑌥𑌰𑍍𑌵𑌣𑍇— '𑌹𑌰𑍇𑌃 𑌪𑌦𑌾𑌕𑍃𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋 𑌹𑌿𑌤𑌾𑌯 𑌮𑌧𑍍𑌯𑍇𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌰𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌂 𑌯𑍋 𑌧𑌾𑌰𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌿𑌯𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌸 𑌪𑍁𑌣𑍍𑌯𑌵𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑌿 𑌸 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌨𑍍𑌭𑌵𑌤𑌿' 𑌇𑌤𑌿 ||

𑌕𑍇𑌚𑌿𑌦𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌾𑌨𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌪𑍁𑌰𑌾𑌣𑌵𑌚𑌨𑌾𑌨𑌿 𑌲𑌿𑌖𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 | 𑌉𑌪𑌬𑍃𑌂𑌹𑌣𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌮𑌹𑌾𑌭𑌾𑌰𑌤𑍇 𑌦𑌰𑍍𑌶𑌿𑌤𑌮𑍍— '𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌮𑍁𑌪𑌬𑍃𑌂𑌹𑌯𑍇𑌤𑍍' 𑌇𑌤𑌿 ||

---

ஸம்ஸார பாசங்களாலும் விடுபடுவான். இங்கேயே விஷ்ணுவையும் அடைவான்.

**கடசாகையிலும் :—** எவன் ஊர்த்வ புண்ட்ரம் தரித்தவனாய், சக்ரஹஸ்தனும், ஈசனும், பரனும், எப்பொழுதும் ஹ்ருதயத்திலிருப்பவனும், பரத்திற்கும் பரனும், மஹத்திற்கும் மஹானுமான விஷ்ணுவை ப்ரணவ மந்த்ரத்தால் த்யானிக்கின்றானோ அவன் மஹாத்மா எனப்படுகிறான்.

**ஆதர்வணத்திலும் :—** எவன் தனக்கு நன்மைக்காக, ஹரியின் பாதம் போன்றதும், நடுவில் சித்ரமுள்ளதுமான ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரிக்கின்றானோ அவன் பரமாத்மாவுக்கு ப்ரியனாய் ஆகிறான், அவன் புண்யமுடையவனாகிறான், அவன் முக்தியடைபவனாகிறான்.

இங்கு உபப்ரும்ஹணங்களான (அர்த்தத்தை நிர்ணயிக்கின்ற) ஸ்ம்ருதி புராண வசனங்கள் எழுதப்படுகின்றன. அந்த ஸ்ம்ருதி புராண வசனங்கள் வேதத்திற்கு உபப்ருஹ்மணங்கள் என்பதும் மஹாபாரதத்தில் சொல்லப்பட்டுள்ளது, 'இதிஹாஸத்தாலும், புராணத்தாலும், வேதார்த்தத்தை நிர்ணயிக்கவேண்டும்' என்று.

स्कान्देऽपि — 'पुराणैरेव विस्पष्टो वेदा- र्थो ज्ञायते यतः । बिभेति मानवाद्वेदः पुरा- णाभ्यासवर्जितात्' इति ॥

सुदर्शनाचार्येऽपि —

'वेदार्थनिर्णयविधौ हि पुराणमङ्गं निर्णीत- वेदविषयाः स्मृतयो भवन्ति' इति ॥

सूतसंहितायामपि —

'अनेकशाखासापेक्षे वैदिकार्थविनिर्णये । स्वबुद्धिकल्पितान्न्यायात् श्रेयो ह्युपबृंहणम्' इति ॥

विष्णुस्मृतौ —

'उपवीतं शिखाबन्धं ऊर्ध्वपुण्ड्रं विना कृ- तम् । अपवित्रकृतं कर्म विप्रस्य विफलं भवेत् ॥ (१) यज्ञो दानं जपो होमः स्वाध्यायः पितृतर्प- णम् । भस्मीभवति तत्सर्वं ऊर्ध्वपुण्ड्रं विना कृ-

---

**ஸ்காந்தத்திலும் :—** வேதத்தின் அர்த்தம், புராணங்களாலேயே ஸ்பஷ்டமாய் அறியப்படுகிறதல்லவா. புராணத்தைப் படிக்காத மனிதனிடமிருந்து வேதம் பயப்படுகின்றது.

**ஸுதர்சனாசார்யரும் :—** வேதார்த்தத்தை நிச்சயிக்கும் விஷயத்தில் புராணம் அங்கமாகும். ஸ்ம்ருதிகள், வேதத்திலுள்ள விஷயங்களை நிர்ணயம் செய்பவையாய் இருக்கின்றன.

**ஸூதஸம்ஹிதையிலும் :—** அநேக சாகைகளை அபேக்ஷித்து நிற்கும் வேதார்த்தத்தின் நிர்ணயத்தில், தன் புத்தியால் கல்ப்பிக்கப்பட்ட ந்யாயத்தைக்காட்டிலும், உபப்ரும்ஹணம் மிகப் பெரியதல்லவா.

**விஷ்ணுஸ்ம்ருதியில் :—** உபவீதம், சிகையைக் கட்டுதல், ஊர்த்வபுண்ட்ரம் இவை இல்லாமலும், பவித்ரமில்லாமலும் செய்த, ப்ராம்ஹணனின் கர்மம் பலமற்றதாகும். யாகம், தானம், ஜபம், ஹோமம், அத்யயனம், பித்ருதர்ப்பணம் இவை ஊர்த்வபுண்ட்ர மில்லாமல் செய்யப்பட்டால், அவை முழுதும் சாம்பலாய் ஆகின்றன. அசுத்தன் ஆனாலும், ஆசாரமற்றவன்

𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌰𑍇𑌷𑍍𑌯𑌃 । 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌿𑌣𑍋 𑌬𑌹𑌿𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌹𑍋𑌮𑌯𑍋𑌸𑍍𑌤𑍁 𑌵𑌿𑌰𑍋𑌧𑍇 । 𑌤𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌅𑌗𑍍𑌨𑌿𑌹𑍋𑌤𑍍𑌰𑌸𑍍𑌯𑍈𑌵 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌤𑌾 । 𑌨 𑌸𑌾𑌯𑌂 𑌬𑌹𑌿𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌸𑍍𑌯 । 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 । 𑌇𑌤𑌰𑌤𑍍𑌰 𑌕𑍢𑌪𑍍𑌤𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌃 ॥

𑌇𑌤𑌿 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌃 ॥

---

## 𑌪𑍍𑌰𑌾𑌤𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾 ॥

𑌅𑌥 𑌪𑍍𑌰𑌾𑌤𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾 ॥

𑌤𑌤𑍍𑌰 𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑌃 —

'𑌶𑌰𑍀𑌰𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑌰𑍍𑌤𑍍𑌯 𑌕𑍃𑌤𑌶𑍌𑌚𑌵𑌿𑌧𑌿𑌰𑍍𑌦𑍍𑌵𑌿𑌜𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌤𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑍀𑌤 𑌦𑌨𑍍𑌤𑌧𑌾𑌵𑌨𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥ 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑌾𑌯𑌮𑍍𑌯 𑌸𑌂𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑍍𑌯 𑌤𑍃𑌚𑍇𑌨𑌾𑌬𑍍𑌦𑍈𑌵𑌤𑍇𑌨 𑌤𑍁' 𑌇𑌤𑌿 ॥

---

*த்ரமே பலிஷ்டமாகும். அதுவே செய்யத்தகுந்தது. ஸ்ம்ருதி யுக்தமான வெளியில் ஸந்த்யோபாஸனம் செய்யத்தகுந்ததல்ல. அது கல்ப்யமூலமானதால், அக்னிஹோத்ரம் க்லுப்தமூல மானதால்" என்பது. (அனுமிதச்ருதி மூலகமான பஹிஸ்ஸந்த்யோ பாஸனத்தைவிட ப்ரத்யக்ஷ ச்ருதிமூலகமான அக்னிஹோத்ரமே பலிஷ்டம். ஆகையால் அக்னிஹோத்ரீ வீட்டிலேயே ஸந்த்யோபாஸனம் செய்யலாம் என்பதாம்.)*

*ஸந்த்யா நிர்ணயம் முற்றிற்று.*

---

## ப்ராதஸ்ஸந்த்யை.



*இனி ப்ராதஸ்ஸந்த்யை சொல்லப்படுகிறது. அதில்,*

**யாக்ஞவல்க்யர்** :— *ப்ராம்ஹணன், மலமூத்ர விஸர்ஜனம் செய்து, சௌசத்தை விதிப்படி செய்து, தந்ததாவனம் செய்து, ப்ராணாயாமம் செய்து, ஆபோஹிஷ்ட முதலிய மூன்று ருக்குகளால் ப்ரோக்ஷித்து ப்ராதஸ்ஸந்த்யையை உபாஸிக்க வேண்டும்.*

வ்யாஸ:—

'ஆபோஹிஷ்டேத்ருசை: குர்யாந்மார்ஜநம் து குசோதகை: । ப்ரணவேந து ஸம்யுக்தம் க்ஷிபேத் வாரி பதே பதே ॥ விப்ருஷோऽஷ்டௌ க்ஷிபேதூர்த்வம் அதோ யஸ்ய க்ஷயாய ச । ரஜஸ்தமோமோஹஜாதாந் ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்திஜாந் । வாங்மந:காயஜாந் தோஷாந் நவைதாந் நவபிர்தஹேத்' இதி ॥

யோகயாஜ்ஞவல்க்ய:—

'நவப்ரணவயுக்தாபி: ஜலம் ஶிரஸி விக்ஷிபேத் । ஆபோஹிஷ்டேதி திஸ்ருபி: ஸுஸம்ப்ரயதஶ்ஶுசி:' இதி ॥

நாராயண:—

'ப்ராங்முகோதங்முகோ வாऽபி ஸந்த்யோபாஸநமாசரேத் । நவப்ரணவஸம்யுக்த மாபோஹிஷ்டத்ருசேந து ॥ ஶிரஸ்யஷ்டாபிரப்யுக்ஷேத் பாதே யஸ்யக்ஷயாய

---

**வ்யாஸர்:**—'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருககுகளால், குசஜலங்களால் மார்ஜனம் செய்யவும். ஒவ்வொரு பாதத்திலும் ப்ரணவத்துடன் கூடியதாகிய ஜலத்தை ப்ரோக்ஷிக்க வேண்டும். தலையில் எட்டுத் திவலைகளையும், காலில் ஒரு திவலையையும் ப்ரோக்ஷிக்க வேண்டும். ரஜஸ், தமஸ், மோஹம் இவைகளால் உண்டாகியதும், ஜாகரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி இவைகளினுண்டாகியதும், வாக்கு, மனம், காயம் இவைகளானுண்டாகியதுமான இந்த ஒன்பது பாபங்களையும் ஒன்பது திவலைகளால் தஹிப்பான்.

**யோகயாக்ஞவல்க்யர்**:—ஒன்பது ப்ரணவங்களுடன் கூடிய 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால், காயத்திலும் மனதிலும் சுத்தனாய், ஜலத்தைத் தலையில் ப்ரோக்ஷிக்க வேண்டும்.

**நாராயணர்**:— கிழக்கு அல்லது வடக்கு நோக்கியவனாய், ஸந்த்யோபாஸநம் செய்யவும். ஒன்பது ப்ரணவங்களுடன் கூடியதாய், 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால், தலையில் எட்டுப்பாதங்களாலும், பாதத்தில் 'யஸ்யக்ஷயாய' என்ப

च । सन्ध्यात्रयेऽपि कर्तव्यं मापोहिष्ठेत्यृचा मार्जनम्' इति ॥ अष्टमेन = पादयोः ॥

तथा च योगयाज्ञवल्क्यः—

'आचमनं स्वप्रकारेण कृत्वा ऋषिच्छन्दोदेवता स्मरणपूर्वकं आपोहिष्ठादित्र्यृचस्यादितस्सप्तभिः पादैः शिरसि सप्त बिन्दून् विक्षिप्य * अष्टमेनैकं बिन्दुमधश्शिरो विक्षिप्य नवमेनैकं बिन्दुमूर्ध्वं प्रक्षिपेत्' इति ॥

प्रणवाद्येन मन्त्रेण प्रोक्षणे फलविशेषमाह शौनकः—

नवप्रणवयुक्तेन आपोहिष्ठत्र्यृचेन तु ।
संवत्सरकृतं पापं मार्जनादेव नश्यति' इति ॥

ब्रह्मा—

'प्रत्यृचं मार्जनं कुर्यात् पादान्ते वा समाहि

* अष्टमेन पादौ नवमेनेति क्वचित् ॥

தாலும ப்ரோக்ஷிக்கவேண்டும. இவ்விதம் ஆபோஹிஷ்டாதி மந்த்ரங்களால் மூன்று ஸந்த்யைகளிலும் ப்ரோக்ஷணம் செய்ய வேண்டும். ஆகையாற்றான்,

**யோகயாக்ஞவல்க்யர் :**— தன் சாகையில் சொல்லிய ப்ரகாரமாய் ஆசமனம் செய்து, ருஷி, சந்தஸ், தேவதை இவைகளை முதலில் ஸ்மரித்து, 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளின் முதலில் உள்ள ஏழு பாதங்களால் தலையில் ஏழு திவலைகளை ப்ரோக்ஷித்து, எட்டாவது பாதத்தால் ஒரு திவலையை பாதத்தில் ப்ரோக்ஷித்து, ஒன்பதாவது பாதத்தால் ஒரு திவலையைத் தலையில் ப்ரோக்ஷிக்கவும்.

ப்ரணவத்துடன் கூடிய மந்த்ரத்தால் ப்ரோக்ஷிப்பதில் பல விசேஷத்தைச் சொல்லுகிறார்,

**சௌனகர் :**— ஒன்பது ப்ரணவங்களுடன் கூடிய 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளால் மார்ஜனம் செய்து கொண்ட உடனேயே, ஒருவர்ஷம் செய்த பாபம் நசிக்கின்றது.

**ப்ரஹ்மா :**— ஒவ்வொரு ருக்கின் முடிவில் ப்ரோக்ஷணம்

तः । तृचस्यान्तेऽथवा कार्यं शिष्टानां मतमीदृशम्' इति ॥

बहुप्रमाणानुगुण्यात् शिष्टाचाराच्च पादान्तमार्जनमेव कार्यम् ॥

स्मृत्यर्थसारे—

'आपोहिष्ठेत्यृचा यस्तु सम्यङ्नोल्लेखं न वेत्ति यः । न तस्य विद्यते सन्ध्या यथा शूद्रस्तथैव सः ॥ आपोहिष्ठेत्यृचा एकमुल्लेखं त्रिषु कारयेत् । चतुर्थं कारयेद्यस्तु ब्रह्महत्यां स विन्दति' इति ॥ प्रतिपादमेकमेकमुल्लेखं कार्यम् । अतश्च प्रत्यृचं मार्जनत्रयमेव न चतुर्थमिति तात्पर्यम् । उल्लेखं = मार्जनम् ॥

तथा च तत्रैव—

'उत्तानेनैव तीर्थेन ब्राह्मेणैव [illegible] विप्रु

செய்யவும. அல்லது, கவனமுடையவனாய் ஒவ்வொரு பாதத்தின் முடிவில் ப்ரோக்ஷணம் செய்யவும. அல்லது, மூன்று ருக்குகளின் முடிவில் ப்ரோக்ஷணம் செய்யவும். சிஷ்டர்களின் கொள்கை இவ்விதமாகியது.

அநேக ப்ரமாணங்களுக்கு ஒத்ததாயிருப்பதாலும், சிஷ்டர்களின் ஆசாரத்தாலும், ஒவ்வொருபாதத்தின் முடிவிலும் மார்ஜனம் செய்வதே யுக்தமானது.

**ஸ்ம்ருத்யர்த்தஸாரத்தில்** :–'ஆபோஹிஷ்ட' என்ற ருக்கினால் உல்லேகயத்தை (மார்ஜனத்தை) எவன் நன்றாய் அறியவில்லையோ, அவனுக்கு ஸந்த்யை இல்லை. அவன் சூத்ரனுக்குச் சமமானவனே. 'ஆபோஹிஷ்ட' முதலிய ருக்குகளில் ஒரு உல்லேகயத்தை (மார்ஜனத்தை) மூன்றிலும் செய்யவேண்டும். நான்காவது மார்ஜனத்தை எவன் செய்கின்றானோ, அவன் ப்ரம்ஹஹத்யையை அடைகிறான். ஒவ்வொரு பாதத்திலும் ஒவ்வொரு மார்ஜனமே செய்யவேண்டும். இவ்விதமாவதால், ஒவ்வொரு ருக்கிலும் மூன்று மார்ஜனங்களே, நான்காவது மார்ஜனம் இல்லை என்பது பொருள். அவ்விதமே,

**ஸ்ம்ருத்யர்த்த ஸாரத்திலேயே** :— நிமிர்ந்த கையின் தேவ

ஷாத் । ஸ்ப்ருஷ்ட்வாம்ப³ ஶிரஸ்யுக்ஷேச்ச உல்லேக்யமிதி ஸூரய: ॥ மஹீஷ்டமுதகம் ஸ்ப்ருஷ்ட்வா ப்ரஸவ்யேந கரேண து । மார்ஜநாந்யாசரேத்தீமாந் ஸந்த்யாகர்மஸு ஸர்வதா' இதி ॥

ஹாரீத:—

'மார்ஜநார்ச்சநபலிகர்மபோஜநாநி தேவதீர்த்தேந காரயேத்' இதி ॥

தந்மார்ஜநம் தாராரூபேண ந கர்தவ்யம் । ததா ச ப்ரஹ்மா—

'தாராச்யுதேந தோயேந ஸந்த்யோபாஸ்திர்விகர்ஹிதா । ந ப்ரஶம்ஸந்தி பிதரோ ந ப்ரஶம்ஸந்தி தேவதா:' இதி ॥

அத்ர ஹேதுமாஹ ஸ ஏவ—

'மந்த்ரபூதம் ஜலம் யஸ்மாத் ஆபோஹிஷ்டாபிமந்த்ரிதம் । பதத்யபவித்ரேஷு தஸ்மாத்தத்பரிவர்ஜயேத்' இதி ॥ அநேந மார்ஜநமந்த்ரா: ஸூசிதா: யதா நவ்யாதோ

---

தீர்த்தத்தினால், தர்ப்பங்களின் நுனிகளால் ஜலத்தைத் தொட்டு, திவலைகளை சிரஸ்ஸில் ப்ரோக்ஷிப்பது 'உல்லேக்யம்' என்கின்றனர் அறிந்தவர். அறிந்தவன், எப்பொழுதும் ஸந்த்யா கர்மங்களில், பூமியிலுள்ள ஜலத்தை, இடது கையால் ஸ்பர்சித்துக் கொண்டு மார்ஜனங்களைச் செய்யவேண்டும்.

**ஹாரீதர்:—** மார்ஜனம், அர்ச்சனம், பலிகர்ம, போஜனம் இவைகளைத் தேவதீர்த்தத்தால் செய்யவேண்டும்.

அந்த மார்ஜனம், தாரையாய் விழுவதாய்ச் செய்யக்கூடாது. அவ்விதமே,

**ப்ரம்ஹா:—** தாரையாய் விழும் ஜலத்தினால் செய்யப்படும் ஸந்த்யோபாஸனம் இழிவானதாகும். அதைப்பித்ருக்கள் புகழ்வதில்லை. தேவர்களும் புகழ்வதில்லை.

இவ்விஷயத்தில் காரணத்தைச் சொல்லுகிறார்,

**ப்ரம்ஹாவே:—** 'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரத்தால் அபிமந்த்ரிதமான ஜலம் மந்த்ரசுத்தமானதால், அது அசுத்த ஸ்தலங்களில் விழுமாகையால் அதை (தாரையாய் விழும் ஜலத்

பவதி, ததா ஶிரஸ்யேவ மார்ஜநம் யத்நத: கார்யமிதி ச ஸூச்யதே ॥

‘கார்யம் தஸ்மிந் மார்ஜநம்’ இதிவசந் தத்ரைவ ஸமந்வ-

‘நத்யாம் தீர்தே ஹ்ரதே வாபி ராஜதே ம்ருண்மயேऽபி வா । ஔடும்பரேऽத ஸௌவர்ணே ராஜதே தாருஸம்பவே ॥ கரேணாத வாமஹஸ்தே வா ஸந்த்யோபாஸநம் ஸமாசரேத்’ இதி ॥ ஔடும்பரே = தாம்ரமயே । கரேண = உதக இதி ஶேஷ: ॥

யத்து வசநம்— ‘வாமஹஸ்தே ஜலம் க்ருத்வா யே து ஸந்த்யாமுபாஸதே । ஸா ஸந்த்யா வ்ருஷலீ ஜ்ஞேயா அஸுராஸ்தேந தர்பிதா:’ இதி, தத் ம்ருண்மயபாத்ராத்யஸம்பவ விஷயம் ॥ ம்ருண்மயாத்யபாவே து ‘கரேணாத வாமஹஸ்தே’ இதி வாமஹஸ்தவிதாநமிதி மாதவீயே ॥

---

தால் மார்ஜனத்தை) வர்ஜிக்கவேண்டும். இதனால், மார்ஜன ஜலபிந்து, பூமியில் எப்படி விழாமலிருக்குமோ அவ்விதம் சிரஸ்ஸிலேயே மார்ஜனம செய்துகொள்ள வேண்டும் என்பதும தோன்றுகிறது.

அப்பொழுது, மார்ஜனம் எப்படிச செய்யப்பட வேண்டும்? எனில், அதில் சொல்லுகிறார்,

ப்ரமாணம் :— நதியிலாவது, புண்யதீர்த்தத்திலாவது, மடுவிலாவது, மண்பாத்ரத்திலாவது, தாம்ரபாத்ரத்திலாவது, ஸ்வர்ணபாத்ரத்திலாவது, வெள்ளிப்பாத்ரத்திலாவது, மரப் பாத்ரத்திலாவது, இடதுகையிலாவது ஜலத்தை வைத்துக் கொண்டு ஸந்த்யோபாஸனம் செய்யவேண்டும்.

ஆனால், "இடதுகையில் ஜலத்தை வைத்துக்கொண்டு, எவர்கள் ஸந்த்யோபாஸனம் செய்கின்றனரோ அவர்களின் அந்த ஸந்த்யை 'வ்ருஷளீ' என்று அறியத்தகுந்தது. அதனால் அஸுரர்களே த்ருப்திசெய்யப்பட்டவராய் ஆகின்றனர்" என்ற வசனமுள்ளதே எனில், அது, மண்பாத்ரம் முதலியது இருக்கும் விஷயத்தைப்பற்றியது. மண்பாத்ரம் முதலியவை இல்லாவிடில் 'இடது கையிலாவது வைத்துக்கொண்டு' என்று, இடது கையின் விதானம் என்று மாதவீயத்தில் உள்ளது.

𑌵𑍍𑌯𑌾𑌸𑌃—

‘𑌉𑌪𑌵𑍀𑌤𑍀 𑌬𑌦𑍍𑌧𑌶𑌿𑌖𑌃 𑌸𑍍𑌵𑌾𑌚𑌾𑌨𑍍𑌤𑍋 𑌦𑍍𑌵𑌿𑌰𑌨𑌾𑌕𑍁𑌲𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌸𑍍𑌸𑌤𑌤𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ॥ 𑌆𑌪𑍋𑌹𑌿𑌷𑍍𑌠𑌾𑌦𑌿𑌤𑌿𑌸𑍃𑌭𑌿𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍𑌤𑍁 𑌕𑍁𑌶𑍋𑌦𑌕𑍈𑌃 । 𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌦𑍍𑌵𑍀𑌪 𑌋𑌷𑌿𑌶𑍍𑌛𑌨𑍍𑌦𑍋 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌪𑍋 𑌹𑌿 𑌦𑍇𑌵𑌤𑌾 ॥ 𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌶𑍍𑌚 𑌅𑌬𑍍𑌦𑍈𑌵𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ॥ 𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌋𑌷𑌿𑌂 𑌛𑌨𑍍𑌦𑍋 𑌦𑍈𑌵𑌤𑌂 𑌯𑍋𑌗𑌮𑍇𑌵 𑌚 । 𑌨𑌾𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑍇𑌜𑍍𑌜𑌪𑍇𑌦𑍍𑌵𑌾𑌪𑌿 𑌪𑌾𑌪𑍀𑌯𑌾𑌨𑍍 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑍁 𑌸𑌃’ 𑌇𑌤𑌿 ॥ 𑌯𑍋𑌗𑌃 = 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 ॥

𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑍋𑌽𑌪𑌿—

‘𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌂 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌂 𑌚 𑌛𑌨𑍍𑌦 𑌋𑌷𑌿𑌂 𑌚 𑌦𑍈𑌵𑌤𑌮𑍍 । 𑌅𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌪𑌞𑍍𑌚 𑌯𑌃 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌨 𑌸 𑌤𑌤𑍍𑌫𑌲𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇’ 𑌇𑌤𑌿 ॥

𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌤𑍍𑌤𑌵𑍍𑌯𑌃 । 𑌯𑌤𑌃 𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌾𑌰𑍍𑌥𑌾 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌃 𑌨𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑍇𑌯𑌾𑌰𑍍𑌥𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌨𑌸𑌮𑌰𑍍𑌥𑌾𑌃 । 𑌅𑌤𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑌨𑍍𑌨

---

**வ்யாஸர்** :—யஜ்ஞோபவீதியாய், சிகையைக்கட்டியவனாய், இருமுறை ஆசமனம் செய்தவனாய், ஏகாக்ரசித்தனாய், கிழக்கு நோக்கியவனாய் ப்ராம்ஹணன் எப்பொழுதும் ஸந்த்யோபாஸனம் செய்யவேண்டும். ‘ஆபோஹிஷ்ட’ முதலிய மூன்று ருக்குகளால் குச ஜலங்களால் மார்ஜனம் செய்யவேண்டும். அந்த ருக்குகளுக்கு, ஸிந்துத்வீபர் ருஷி, காயத்ரீ சந்தஸ், அப்பு தேவதை, மார்ஜனத்தில் விநியோகம் சொல்லப்பட்டுள்ளது. ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் இவைகளை அறியாமல், கற்றுக்கொடுக்கக்கூடாது, ஜபிக்கவும் கூடாது. அவன் அதிக பாபமுடையவனாய் ஆகிறான்.

**யாக்ஞவல்க்யரும்** :— ப்ராம்ஹணம், விநியோகம், சந்தஸ், ருஷி, தேவதை என்ற ஐந்தையும் அறியாமல் எவன் கர்மத்தைச் செய்கின்றானோ அவன் அக்கர்மத்தின் பலத்தை அடைவதில்லை.

மந்த்ரங்களின் அர்த்தத்தையும் அறியவேண்டும். ஏனெனில், அர்த்தமறியப்படாத மந்த்ரங்கள், அனுஷ்டிக்கப்பட வேண்டிய விஷயங்களை வெளியிடுவதில் ஸமர்த்தங்களாய்

ஜ்ஞாதாநுஷ்டாதைவ கர்மபலாநி ப்ராப்நோதி ந ச ப்ரத்யவாயமேதீதி ந்யாயஸித்தம் ॥

மநுரபி—

'யத஧ீதமவிஜ்ஞாதம் நிகதேநைவ ஶப்த்யதே । அநக்நாவிவ ஶுஷ்கைதோ ந தஜ்ஜ்வலதி கர்ஹிசித்' இதி ॥

வ்யாஸோऽபி—

'பாடமாத்ராவஸந்நஸ்து பங்கே கௌரிவ ஸீததி' இதி ॥

ஶ்ருதிஶ்ச—

'யதேவ வித்யயா கரோதி ததேவ வீர்யவத்தரம் பவதீ'தி, 'யோऽர்த்தஜ்ஞ இத்ஸகலம் பத்ரமஶ்நுதே நாகமேதி ஜ்ஞாநவிதூதபாப்மா' இதி ச ॥

அத்ர ஹரதத்தேந மந்த்ரார்த்தோ விவ்ருத:—

'ஆபோ ஹி ஷ்டா மயோபுவ:' । ஹே ஆப:! யூயம்

---

*அடைவதில்லை. ஆகையால் மந்த்ரார்த்தங்களை அறிந்த அனுஷ்டாதாவே கர்மபலன்களை அடைகிறான். ப்ரத்யவாயத்தையும் அடைவதில்லை என்பது ந்யாயத்தால் ஸித்தமாகியது.*

**மனுவும் :**—*அர்த்தக்ஞானமில்லாமல் அத்யயனம் செய்யப்பட்ட எது பாடமாத்ரத்தால் உச்சரிக்கப்படுகிறதோ, அது, அக்னியல்லாத சாம்பலில் உலர்ந்த ஸமித்துப்போல் ஒருகாலும் ஜ்வலிப்பதில்லை.*

**வ்யாஸரும் :**— *அத்யயனத்தைமட்டில் முடித்தவன் (அர்த்தக்ஞானமில்லாதவன்) சேற்றில் ஆழ்ந்த பசுப்போல் வருந்துவான்.*

**ச்ருதியும் :**— *'மந்த்ரார்த்தக்ஞானத்துடன் எக்கர்மத்தைச் செய்கின்றானோ அக்கர்மமே அதிக வீர்யமுள்ளதாய் ஆகின்றது' என்றும், 'அர்த்த க்ஞானமுள்ளவனே ஸகலமான நன்மையையும் அடைகிறான், அவன், ஜ்ஞானத்தால் பாபங்களையகற்றி ஸ்வர்க்கத்தை அடைகிறான்' என்றும்.*

**இங்கு, ஹரதத்தரால்,** *மந்த்ரார்த்தம் சொல்லப்பட்டுள்ளது.* **'ஆபோஹி+புவ:'. ஆப: = ஓ ஜலங்களே!** *நீங்கள்,*

மயோபு⁴வ: ஸ்த² । மய இதி ஸுக²நாம । தஸ்ய பா⁴வயித்ர்ய: ஸ்த² । ஹிஶப்³த³: ப்ரஸித்³தௌ⁴ । 'தா ந ஊர்ஜே த³தா⁴தந' । தா: யூயம் ந: = அஸ்மாந் ஊர்ஜே = அந்நாய த³தா⁴தந = த⁴த்த । அந்நம் அஸ்மப்⁴யம் ப்ரயச்ச²த । 'மஹே ரணாய சக்ஷஸே' । மஹே = மஹதே ரணாய = ரமணீயாய சக்ஷஸே = த³ர்ஶநாய த³தா⁴தந । மஹத் ரமணீயம் ஜ்ஞாநம் அஸ்மப்⁴யம் ப்ரயச்ச²த । 'யோ வ: ஶிவதமோ ரஸ:' । வ: = யுஷ்மாகம் ஸம்ப³ந்தீ⁴, ய: ஶிவதம: ஸுகா²திஶயஹேதுர்ய: ரஸநேந்த்³ரியக்³ராஹ்ய:, 'தஸ்ய பா⁴ஜயதேஹ ந:' । தஸ்யேதி த்³விதீயார்தே² ஷஷ்டீ² । தம் ரஸம் பா⁴ஜயத । இஹலோகே ந: அஸ்மாந் ॥ கிமிவ? । 'உஶதீரிவ மாதர:' । உஶதீ: உஶத்ய: காமயமாநா:, மாதர: வத்ஸாந் யதா² க்ஷீராதி³ரஸேந பா⁴ஜயந்தி, ததா² யுஷ்மதீ³யம் ரஸம் அஸ்மப்⁴யம் ப்ரயச்ச²த ॥ கிஞ்ச — 'தஸ்மா அரங்க³மாமவ:' । தஸ்மா இதி த்³விதீயார்தே² சதுர்த்²யீ । தம் ரஸம், அரம் அலம் பர்யாப்தம், க³மாம ப்ராப்நு-

---

மயோபுவ: ஸ்த=மய: என்பது ஸுகத்தின் நாமம். அந்த ஸுகத்தைச் செய்பவர்களாய் இருக்கின்றீர்கள். ஹி=ப்ரஸித்தம். 'தாந + ததாதன'. தா:= அந்த நீங்கள், ந:= எங்களை, ஊர்ஜே=அன்னத்தின்பொருட்டு, ததாதந=தரியுங்கள். அன்னத்தை எங்களுக்குக் கொடுங்கள் என்று பொருள். 'மஹே + சக்ஷஸே'. மஹே=பெரியதும, ரணாய=ரமணீயமுமான, சக்ஷஸே=தர்சனத்திற்காக, சிறந்ததும ரமணீயமுமான க்ஞானத்தை எங்களுக்குக் கொடுங்கள் என்று பொருள். 'யோவஶ்சிவதமோரஸ:'. வ:=உங்களுடையதாகிய எந்த, சிவதம:= ஸுகாதிசயத்திற்குக் காரணமாகிய, ரஸ:=நாக்கினால் க்ரஹிக்கக்கூடிய ரஸமுண்டோ, 'தஸ்ய+ஹந:' தஸ்ய = அந்த ரஸத்தை, பாஜயத = அடைவியுங்கள், இஹ = இவ்வுலகில், ந:= எங்களை. எதைப்போல்? 'உசதீரிவமாதர:'. உசதீ:=வாத்ஸல்யமுள்ள, மாதர: இவ=தாய்மார்கள்போல். அவர்கள் எப்படிப் புத்ரர்களுக்குப் பால் முதலிய ரஸத்தைக் கொடுக்கின்றனரோ அப்படி உங்களுடைய ரஸத்தை எங்களுக்குக் கொடுங்கள் என்று பொருள். இனியும், 'தஸ்மா அரங்கமாமவ:'. வ:=

यावत्तृप्यन्तः । तस्मा अरं गमाम वः । वः युष्माकं । 'यस्य क्षयाय जिन्वथ' । यस्य तृतीयार्थे षष्ठी । येन रसेन क्षयाय निवासाय । निवासवत्त्वेनाध्यवसा[illegible] । द्वितीयार्थे चतुर्थी । क्षयं निवासस्थानीयं जिन्वथ प्रीणयथ । 'आपो जनयथा च नः' । हे आपः ! येन च पुत्रादिप्रजाः नः अस्माकं जनयथ संपादयथेति ॥

व्यासः —

'आपोहिष्ठा सुप्रसिद्धा नवपादाः प्रकीर्तिताः । पादेपादे क्षिपेद्वारि ब्रह्महत्यां व्यपोहति' इति ॥

श्रुतिश्च — 'आपोहिष्ठीयाभिर्मार्जयेत् तृप्तिः पूयते । आपो वै सर्वा देवताः । देवताभिरेवात्मानं पावयते' इति ॥ एवमार्जनविधिना मार्ज

---

உங்களுடைய. தஸ்மை = அந்த ரஸத்தை, அரம் = வேண்டும் வரை, கமாம = அடையக்கடவோம். 'யஸ்யக்ஷயாயஜிந்வத'. யஸ்ய = எந்த ரஸத்தால், க்ஷயாய = எங்களுடைய நிவாஸத்தை, 'க்ருஹத்தை', ஜிந்வத = ப்ரீதியை அடைவிக்கின்றீர்களோ. 'ஆபோஜநயதாசந:'. ஆப: = ஹேஜலங்களே! எந்த ரஸத்தினால் புத்ரன் முதலிய ப்ரஜைகளை, ந: = எங்களுக்கு, ஜநயதச = உண்டு பண்ணுகிறீர்களோ, அந்தரஸத்தை அடையககடவோம்.

**வ்யாஸர்**:—'ஆபோஹிஷ்ட' முதலிய மந்த்ரங்கள் மிக ப்ரஸித்தமாகியவைகள். அவை ஒன்பது பாதங்களுடையவை. ஒவ்வொரு பாதத்திலும் ஜலத்தை ப்ரோக்ஷிக்கவும். ப்ரோக்ஷிப்பவன் ப்ரம்ஹஹத்யையையும் போக்குகிறான்.

**ச்ருதியும்** :—'ஆபோஹிஷ்ட' முதலியவையால் ஜலத்தை ப்ரோக்ஷித்துககொள்ளவேண்டும். ஜலங்கள் ஸர்வதேவதைகளாயுமுள்ளன. தேவதைகளால் தன்னைச் சுத்தனாக்குகின்றனர். இவ்விதம் சொல்லிய விதிப்படி மார்ஜனம்செய்துகொண்டு, பிறகு 'ஸூர்யச்ச' என்ற மந்த்ரத்தால் ஜலத்தைப் பருகவேண்டும்.

𑌦𑌿𑌨𑌾 𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌪𑌃 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍 । 𑌤𑌥𑌾 𑌚 𑌶𑍌𑌨𑌕𑌃—

‘𑌅𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌨𑍁𑌵𑌾𑌕𑍇𑌨 𑌸𑌾𑌯𑌂𑌕𑌾𑌲𑍇 𑌤𑍍𑌵𑌪𑌃 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍 ।
𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌨𑍁𑌵𑌾𑌕𑍇𑌨 𑌪𑍍𑌰𑌾𑌤𑌃𑌕𑌾𑌲𑍇 𑌪𑌿𑌬𑍇𑌦𑌪𑌃 ॥
𑌆𑌪𑌃 𑌪𑍁𑌨𑌨𑍍𑌤𑍍𑌵𑌿𑌤𑍍𑌯𑍇𑌤𑍇𑌨 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑍇 𑌚 𑌜𑌲𑌂 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍 ।
𑌅𑌬𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌭𑌿𑌃 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌯𑍇𑌤𑍍 𑌕𑍁𑌶𑌵𑌾𑌰𑌿𑌣𑌾’
𑌇𑌤𑌿 ॥

𑌵𑍍𑌯𑌾𑌸𑌃—

‘𑌸𑌾𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌤𑌸𑍍𑌸𑍂𑌰𑍍𑌯𑍇𑌤𑍍𑌯𑌪𑌃 𑌪𑌿𑌬𑍇𑌤𑍍 । 𑌆𑌪𑌃𑌪𑍁𑌨𑌨𑍍𑌤𑍁 𑌮𑌧𑍍𑌯𑌾𑌹𑍍𑌨𑍇 𑌤𑌤𑌸𑍍𑌤𑍁𑌦𑍍𑌵𑌿𑌰𑌾𑌚𑌮𑍇𑌤𑍍 ॥ 𑌤𑌤𑌸𑍍𑌸𑍁𑌰𑌭𑌿𑌮𑌤𑍍𑌯𑌰𑍍𑌚𑌾 𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌂 𑌤𑍁 𑌕𑍁𑌶𑍋𑌦𑌕𑍈𑌃 । 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑌿𑌰𑌣𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌾𑌭𑌿 𑌯𑌥𑌾𑌶𑌾𑌖𑌂 𑌤𑍁 𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌮𑍍’
𑌇𑌤𑌿 ॥

𑌬𑍌𑌧𑌾𑌯𑌨𑌃—

‘𑌅𑌥𑌾𑌤𑌸𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌵𑌿𑌧𑌿𑌂 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌃

---

அவ்விதமே,

**சௌனகர் :—** ‘அக்னிஶ்ச’ என்ற அனுவாகத்தால், மாலையில் ஜலத்தைப் பருகவும். ‘ஸூர்யஶ்ச’ என்ற அனுவாகத்தால் காலையில் ஜலத்தைப் பருகவும் ‘ஆப: புனந்து’ என்ற அனுவாகத்தால் மத்யாஹ்னத்தில் ஜலத்தைப் பருகவும். பிறகு சுத்தங்களான, அபலிங்கங்களான=‘ஆபோஹிஷ்டா’ முதலியதான மந்த்ரங்களால் குச ஜலத்தால் ப்ரோக்ஷணம் செய்யவும்.

**வ்யாஸரும் :—** மாலையில் ‘அக்னிஶ்ச’ என்றும், காலையில் ‘ஸூர்யஶ்ச’ என்றும், மத்யாஹ்னத்தில் ‘ஆப: புனந்து’ என்றும் மந்த்ரத்தால் ஜலத்தைப் பருகவேண்டும். பிறகு இருமுறை ஆசமனம் செய்யவும். பிறகு ‘ஸுரபிமதீ’ என்ற ருக்காலும், ‘ஹிரண்யவர்ணா:’ என்பது முதலாகிய ருக்குகளாலும், குசோதகங்களால் மார்ஜனத்தை, அவரவர் சாகையில் சொல்லியபடி செய்யவேண்டும்.

**போதாயனரும் :—** இனி ஸந்த்யோபாஸனத்தின் விதியைச்

यश्च गत्वा प्रयतोऽभिषिक्तः प्रक्षालितपाणिपा
दोऽप आचम्याब्लिङ्गाभिः प्रोक्ष्य अग्निश्च मा मन्युश्चेति
सायमपः पीत्वा सूर्यश्च मा मन्युश्चेति प्रातः स
पवित्रेण पाणिना सुरभिमत्याऽब्लिङ्गाभिर्हिर
ण्यवर्णाभिः पावमानीभिरन्यैश्च पवित्रैरात्मा
नं प्रोक्ष्य प्रयतो भवति' इति ॥

पितामहोऽपि—

'सूर्यश्चेत्यनुवाकेन जलं पीत्वा समाहि
तः । आत्मानं प्रोक्षयेच्च पश्चाच्च पवित्रकरो द्वि
जः ॥ प्रोक्षेच्च सुरभिमत्या च आपोहिष्ठादिभिस्त्र
या । प्रदक्षिणं परिक्रम्य आरभेद्वेदचोदितम्'
इति ॥ सुरभिमती = दधिक्राव्ण्ण इति ऋक् । 'दधिक्रा
व्ण्णो अकारिषमिति सुरभिमतीमृचं वदन्ति । प्राणा
वै सुरभयः । प्राणानेवात्मन्दधते' इति श्रु
तेः ॥

---

சொல்லுகிறோம். புண்யதீர்த்தத்தை அடைந்து, சுத்தனாய், ஸ்நானம் செய்தவனாய், கைகால்களை அலம்பியவனாய், ஆசமனம் செய்து, ஆபோஹிஷ்டாதி மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து, 'அக்னிஶ்ச' என்ற மந்த்ரத்தால் மாலையிலும், ஸூர்யஶ்ச என்பதால் காலையிலும் ஜலத்தைப்பருகி, பவித்ரமணிந்த கையால், ததிக்ரா வ்ண்ண:, ஆபோஹிஷ்ட, ஹிரண்யவர்ண:, பவமான: என்ற மந்த்ரங்களாலும், மற்றப் பவித்ரமந்த்ரங்களாலும் தன்னைப்ரோக்ஷித்துப பரிசுத்தனாகிறான்.

**பிதாமஹரும்** :— ப்ராம்ஹணன் பவித்ரமணிந்தகையுடன் கவனமுள்ளவனாய், 'ஸூர்யஶ்ச' என்ற அனுவாகத்தால் ஜலத்தைப்பருகி, பிறகு 'ஸுரபிமதி'யாலும், 'ஆபோஹிஷ்ட' முதலியவையாலும் ப்ரோக்ஷிக்கவேண்டும் ப்ரதக்ஷிணமாய்ச் சுற்றிப் பிறகு வேதம் விதித்ததைச் செய்ய ஆரம்பிக்கவேண்டும். ஸுரபிமதீ = ததிக்ராவ்ண்ண: என்ற ருக்கு. அவ்விதம் ச்ருதியுள்ளது.

𑌭𑌰𑌦𑍍𑌵𑌾𑌜𑌃—

'𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌨𑍁𑌵𑌾𑌕𑌸𑍍𑌯𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑍍 𑌋𑌷𑌿𑌶𑍍𑌛𑌨𑍍𑌦𑍋 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑍀𑌰𑌿𑌤𑌮𑍍 । 𑌦𑍇𑌵𑌤𑌾 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌶𑍍𑌚𑌾𑌪𑌾𑌂 𑌪𑍍𑌰𑌾𑌶𑌨𑍇 𑌸𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌃 ॥ 𑌋𑌷𑌿𑌰𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌵𑌾 𑌵𑌾𑌮𑌨𑍋𑌽𑌥𑌵𑌾 । 𑌛𑌨𑍍𑌦𑍋 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌦𑍇𑌵𑌤𑌾𑌗𑍍𑌨𑌿𑌰𑍁𑌦𑍀𑌰𑌿𑌤𑌃 ॥ 𑌆𑌪𑌃 𑌪𑍁𑌨𑌨𑍍𑌤𑍍𑌵𑌿𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌦𑍇𑌵𑌾 𑌋𑌷𑌯𑌃 । 𑌛𑌨𑍍𑌦𑍋𑌽𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌬𑍍𑌦𑍇𑌵𑌤𑌾𑌽𑌽𑌪𑍋 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌰𑌥𑌾𑌪𑌿 𑌵𑌾 ॥ 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌯𑍇𑌚𑍍𑌚 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑍍𑌣𑍇𑌤𑍍𑌯𑍃𑌚𑌾 । 𑌆𑌪𑍋 𑌹𑌿𑌷𑍍𑌠𑌾𑌦𑌿𑌭𑌿𑌸𑍍𑌤𑌿𑌸𑍃𑌭𑌿𑌃 𑌋𑌗𑍍𑌭𑌿𑌃 𑌸𑌕𑍂𑌰𑍍𑌚𑍋𑌜𑍍𑌜𑌲𑍈𑌃 ॥ 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑍍𑌣 𑌇𑌤𑍍𑌯𑌸𑍍𑌯 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵 𑌋𑌷𑌿𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌃 । 𑌛𑌨𑍍𑌦𑍋𑌽𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌬𑍍𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌦𑍇𑌵𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌣𑍇 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 ॥ 𑌵𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑍍𑌯𑌾 𑌤𑌤 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌿𑌷𑌿𑌞𑍍𑌚𑍇𑌤𑍍𑌸𑌮𑌸𑍍𑌤𑌯𑌾' 𑌇𑌤𑌿 ॥

𑌚𑌰𑍍𑌯𑌾𑌪𑌾𑌦𑍇—

'𑌪𑌾𑌦𑍌 𑌹𑌸𑍍𑌤𑍌 𑌚 𑌸𑌂𑌕𑍍𑌷𑌾𑌲𑍍𑌯𑌾𑌚𑌮𑍍𑌯 𑌬𑌦𑍍𑌧𑌶𑌿𑌖𑌶𑍍𑌶𑍁𑌚𑌿𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌨𑌾𑌯𑌮𑍍𑌯 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑍋𑌪𑌾𑌸𑌨𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ॥ 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌬𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑍈𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌹𑍃𑌤𑌿𑌭𑌿𑌃 𑌪𑌰𑌿𑌷𑌿𑌚𑍍𑌯 𑌸𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌕𑌮𑍍 ।

---

**பரத்வாஜர்** :—'ஸூர்யஶ்ச' என்ற அனுவாகத்திற்கு, அக்னி ருஷி, காயத்ரம் சந்தஸ், ஸூர்யன் தேவதை, ஜலப்ராசனத்தில் விநியோகம். இவ்விதமறிந்து பருகவும். 'அக்னிஶ்ச' என்பதற்கு ஸூர்யன், அல்லது வாமனன் ருஷி, காயத்ரம் சந்தஸ், அக்னி தேவதை. 'ஆப:புனந்து' என்பதற்கு விச்வேதேவர்கள் ருஷிகள், அனுஷ்டுப சந்தஸ், அப்புகள் அல்லது ப்ருஹஸ்பதி தேவதை. பிறகு 'ததிக்ராவ்ண:' என்ற ருக்கினாலும் ஆபோஹிஷ்ட முதலிய மூன்று ருக்குகளாலும் குசஜலங்களால் தன்னை ப்ரோக்ஷிக்கவேண்டும். 'ததிக்ராவ்ண:' என்பதற்கு வாமதேவர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், விச்வேதேவர்கள் தேவதை, ப்ரோக்ஷணத்தில் விநியோகம். பிறகு சேர்க்கப்பட்ட வ்யாஹ்ருதிகளால் தன்னை ஜலத்தால் சுற்றவேண்டும்.

**சர்யாபாதத்தில்** :— கால் கைகளை அலம்பி, ஆசமனம் செய்து, சிகையைக் கட்டி, சுத்தனாய், ப்ராணாயாமம் செய்து, ஸங்கல்ப்பித்து, ஸந்த்யோபாஸநம் செய்யவும். ஆபோஹிஷ்டாதிகளால் ப்ரோக்ஷித்து, வ்யாஹ்ருதிகளால் ஜலத்தால்

வீக்ஷ்யாத்மநி ததிக்ராவ்ணோ: ப்ரோக்ஷ்யாத்பி: பரிஷிஞ்சேத்’ இதி ॥

ஸ்ம்ருத்யந்தரேऽபி—

‘ஸூர்யஶ்சேத்யநுவாகஸ்ய ச்சந்தோ காயத்ரமுச்யதே । ஸவிதா தேவதா சாஸ்ய ருஷிரக்நிரிதி ஸ்ம்ருத: ॥ ததிக்ராவ்ணோऽநுஷ்டுப் வாமதேவ ருஷி: ஸ்ம்ருத: । விஶ்வேதேவா தேவதா ஸ்யாத் ததிக்ராவேதி வா ஸ்ம்ருத:’ இதி ॥

ச்சந்தோகாநாம் ஆசமநமந்த்ரௌ கௌதமேநோக்தௌ ‘அஹஶ்சாऽऽதித்யஶ்ச புநாத்விதி ப்ராத: ராத்ரிஶ்ச வருணஶ்ச புநாத்விதி ஸாயம்’ இதி ॥

மந்த்ரார்த்தஸ்து— ‘ஸூர்யஶ்ச மா மந்யுஶ்ச மந்யுபதயஶ்ச’ । ஸூர்யோ நாம அஹரபிமாநீ மண்டலாந்தர்வர்த்தீ தேவ: । அஹ்நி க்ரியமாணாநாம் கர்மணாம் தததீநத்வாத் தத்ப்ரார்த்தநா । மந்யு: க்ரோத: தததீநத்வாத் பாபப்ரவ்ருத்தேரிதி தத்ப்ரார்த்தநா । மந்யுபதயஶ்ச மந்யோ: க்ரோதஸ்ய பதி: நியோஜக: யேஷாமிந்த்ரியாணாம் தாநீந்த்ரி

---

தன்னைச்சுற்றி, மந்த்ரத்துடன் ஜலத்தைப் பருகி, ‘ததிக்ரா’ முதலிய மந்த்ரங்களால் ப்ரோக்ஷித்து, ஜலத்தால் தன்னைச் சுற்றவும்.

மற்றொரு ஸ்ம்ருதியிலும் :— ‘ஸூர்யஶ்ச’ என்ற அனுவாகத்திற்கு காயத்ரம் சந்தஸ், ஸவிதா தேவதை, அக்னி ருஷி. ‘ததிக்ரா’ என்ற ருக்குக்கு அனுஷ்டுப் சந்தஸ், வாமதேவர் ருஷி, விச்வேதேவர் தேவதை, அல்லது, ததிக்ராவா தேவதையாம்.

சந்தோகர்களுக்கு ஆசமன மந்த்ரங்கள் கௌதமரால் சொல்லப்பட்டுள்ளன— ‘அஹஶ்ச + புநாது’ என்று காலையில், ‘ராத்ரிஶ்ச + புநாது’ என்று மாலையில் என்று.

மந்த்ரங்களின் அர்த்தமேதெனில்—

‘ஸூர்யஶ்ச + மன்யுபதயஶ்ச’. ஸூர்யன் என்பவர், பகலுக்கு அதிபதியும் மண்டலத்தினுள்ளிருப்பவருமான தேவன். பகலில் செய்யப்போகும் கர்மங்கள் அவருக்கு அதீனமானதால் அவரைப்பற்றி ப்ரார்த்தனை. மன்யு என்பது க்ரோதம். பாபத்தில் ப்ரவ்ருத்தி அவனதீனமானதால் அவனைப்பற்றி ப்ரார்த்தனை.

யாணி மந்யுபதய: | தேஷ்வக்ஷாதீந்த்ரியபடிசேஷு வி-
ஷயரூபதுஷ்டவதஸ்தாநேஷு ஸ்வஸ்யாகர்ஷணாபாவாய
தத்விஷயப்ரார்த்தநா | ஸர்வத்ர சகாரஸ்யாத்யாஹார: |
'மந்யுக்ருதேப்ய: பாபேப்யோ ரக்ஷந்தாம்' | 'காம ஏஷ
க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: | மஹாஶநோ மஹா
பாப்மா வித்த்யேநமிஹ வைரிணம்' இத்யாதிஶாஸ்த்ரப்ரஸித்த-
க்ரோதாக்யமந்யுக்ருதேப்ய: தந்நிமித்தேப்ய: பாபேப்ய:
ஸர்வேப்யோ ரக்ஷந்தாம் மா = மாம் | யதாஹம் மந்யுவ
ஶோ பூத்வா பாபம் ந கரிஷ்யாமி, ததா ஸூர்யாத-
யோ ரக்ஷந்த்வித்யர்த்த: | கிஞ்ச 'யத்ராத்ரியா பாபமகார்-
ஷம்' | ராத்ர்யா = ஸப்தம்யர்த்தே த்ருதீயா | ராத்ராவித்ய-
ர்த்த: | யத்வா ராத்ரிஶப்தேந ததபிமாநிநீ தேவதோச்ய-
தே | ராத்ர்யபிமாநிந்யா தேவதயா ப்ரேரிதஸ்ஸந் யத்பா-
பம் ராத்ரௌ க்ருதவாநஸ்மி | ததேவ ஸாதநதோ விஶிந-
ஷ்டி — 'மநஸா வாசா ஹஸ்தாப்யாம்' | பத்ப்யாமுதரேண

---

மன்யுபதயஶ்ச = மன்யுவென்கிற க்ரோதம பதி = ஏவுகின்றவன் எந்த இந்த்ரியங்களுக்கோ அந்த இந்த்ரியங்கள் மன்யுபதிகள் எனப்படுகின்றன. அந்தக்கண் முதலிய இந்த்ரியங்களாகிய தூண்டிகளால், விஷயங்களாகிய கொடிய வதஸ்தானங்களில், தன்னை இழுக்காமலிருப்பதற்காக அவைகள் விஷயமான ப்ரார்த்தனை. சகாரம் சேர்ப்பதற்காக. 'மன்யுக்ருதேப்ய: பாபேப்யோ ரக்ஷந்தாம்'. 'காமஏஷ க்ரோதஏஷ:' என்பது முதலிய சாஸ்த்ரங்களால் ப்ரஸித்தனை, க்ரோதமெனும் மன்யுவினுல் செய்யப்பட்ட, அவனே நிமித்தமாயுடைய பாபங்கள் எல்லாவற்றினின்றும் என்னைக் காக்கவேண்டும். எவ்விதம் நான் மன்யுவுக்கு அதீனனுகிப் பாபத்தைச் செய்யாமலிருப்பேனே அவ்விதம் ஸூர்யன் முதலியவர்கள் என்னைக் காக்கவேண்டும் என்பது பொருள். இனியும்,—'யத்ராத்ரியாபாபமகார்ஷம்'. ராத்ர்யா = ராத்ரியில். அல்லது, ராத்ரி சப்தத்தால் அதற்கு அபிமானினியான தேவதை சொல்லப்படுகிறது ராத்ர்யபிமானினியான தேவதையால் ஏவப்பட்டவனுய், எந்தப் பாபத்தை ராத்ரியில் செய்தேனே, அதையே ஸாதனங்களால் விசேஷிக்கின்றுன்,

ஶிஶ்நேதி । மநஸா பரஹிம்ஸாதிசிந்தநேந, வாசா அந்ருதபாஷணாதிபி:, ஹஸ்தாப்யாம் ப்ராஹ்மணாவகோரணாதிபி:, பத்ப்யாம் அநாக்ரமிதவ்யகலிங்கதேஶாத்யாக்ரமணாதிபி:, உதரேண அபக்ஷ்யபக்ஷணாதிபி:, ஶிஶ்நா ஶிஶ்நேந । ஸுபாம் ஸுலுகித்யாகார: । அகம்யாகமநாதிபி:, உபலக்ஷணமேதந்த்ரியேஷு யத் பாபமகார்ஷம், । 'ராத்ரிஸ்ததவலும்பது' = ராத்ர்யபிமாநிநீ தேவதா அக்நிசந்த்ரௌ வா தத்ஸர்வமவலும்பது அபநயது விநாஶயது । 'யத்கிஞ்ச துரிதம் மயி । இதமஹம் மாமம்ருதயோநௌ । ஸூர்யே ஜ்யோதிஷி ஜுஹோமி ஸ்வாஹா' । இஹஜந்மநி ஜந்மாந்தரே வா க்ருதம் யத்கிஞ்சநாபி துரிதம் பாபராஶி: மயி வர்த்ததே, இதம் பாபஜாதம் ஸர்வம் மாஞ்ச பாபஸ்ய கர்தாரம் லிங்கஶரீராபிமாநிநம் அம்ருதயோநௌ அம்ருதம் தச்ச யோநிஶ்சேத்யம்ருதயோநி: । தஸ்மிந்நம்ருதே அமரணயோகே நித்யே யோநௌ ஸர்வகாரணே ஸூர்யே = ஸுஷ்டு ஸரயதி ப்ரேரயதீதி ஸூர்ய:, தஸ்மிந்நாதி

---

'மனஸாவாசா + சிச்னா' என்று மனதினால் பிறருக்கு ஹிம்ஸை முதலியதைச் சிந்திப்பதால், வாக்கினால் பொய் பேசுவது முதலியவையால், ஹஸ்தங்களால் ப்ராம்ஹணனை அடிப்பதற்குக் கையை ஓங்குவது முதலியவையால், கால்களால் செல்லக்கூடாத கலிங்கதேசம் முதலியதைச் செல்வதால், வயிற்றினால் நிஷித்த பக்ஷணம் முதலியவையால், சிச்னா = சிச்னத்தால் அகம்யாகமனம் முதலியவைகளால், உபலக்ஷணமானதால் மற்ற இந்த்ரியங்களாலும், எந்தப் பாபத்தைச் செய்தேனோ, 'ராத்ரிஸ்ததவலும்பது' = ராத்ர்யபிமானினியான தேவதை, அல்லது அக்னி சந்த்ரர்கள் அது முழுவதையும், அவலும்பது = அகற்றவேண்டும். 'யத்கிஞ்சதுரிதம்மயி + ஜுஹோமிஸ்வாஹா'. இந்த ஜன்மத்தில், ஜன்மாந்தரத்திலோ செய்யப்பட்ட எந்த துரிதம் = பாபக்குவியல் என்னிடம் இருக்கின்றதோ இந்தப்பாபக் குவியல் முழுவதையும், இந்தப்பாபத்தைச் செய்தவனும், லிங்கசரீராபிமானியுமான என்னையும், அம்ருதயோனௌ = மரணதர்மமற்றதும், ஸர்வகாரணமுமான, ஸூர்யே = நன்றாய் ப்ரேரணம் செய்வது

த்யாத்மகே ஜ்யோதிஷி ஸ்வயம்ப்ரகாஶபோதைகதாநே ஆத்மநி அஹம் ஜுஹோமி ப்ரக்ஷிபாமி । ஆத்மவஹ்நௌ ப்ரக்ஷிப்ய தேநாக்நிநா பூர்வோக்தம் பாபம் ஸர்வம் பஸ்ம கரோமீதி யாவத் ॥

அக்நிஶ்சேத்யஸ்ய ஸூர்யஶ்சேத்யநேந ஸமாநோऽர்த:। இயாம்ஸ்து விஶேஷ: । அக்நி: ராத்ர்யதிபதி: । 'யத³ஹ்நா' 'அஹஸ்தத³வலும்பது' இத்யத்ர ச அஹ்ந: பதிராதித்யோ ऽஹரித்யுச்யதே । 'ஸத்யே ஜ்யோதிஷீ'தி ஸத்யஸ்வபாவே ஜ்யோதிஷீதி ॥

'ஆப: புநந்த்வி'தி — ஆப: அபிமந்த்ரிதா: । புநந்து = ஶோதயந்து ப்ருதிவீம் । ப்ருதிவ்யம்ஶஸ்ய பாஹுல்யாத் ப்ருதிவீஶப்தேந ஸ்தூலஶரீரமுச்யதே । ப்ருதிவீ பூதா = பூதம் ஶரீரம், லிங்கஶரீராபிமாநிநம் மாம் புநாது । தத்ர ராகத்³வேஷபாபாதிமலநிராஸேந ஶோ

---

மான, ஆதித்யஸ்வரூபமான, ஜ்யோதிஷி = ஸ்வயம ப்ரகாச போதமயமான ஆத்மாவில், ஜுஹோமி = நான் சேர்க்கிறேன். ஆத்மாக்னியில் சேர்த்து அந்த அக்னியால் முன் சொல்லிய பாபம் முழுவதையும் பஸ்மமாக்குகின்றேன் என்பது பொருள்.

'அக்னிஶ்ச' என்கிற மந்த்ரத்திற்கும் அர்த்தம 'ஸூர்யஶ்ச' என்பதற்குப் போலவே. இது மட்டில் விசேஷம். அக்னி: என்பதற்கு ராத்ரியின் அதிபதி என்று பொருள். 'யதஹ்ன', 'அஹஸ்ததவலும்பது' என்றவைகளிலும், பகலுக்குப்பதியாகிய ஆதித்யன் 'அஹ:' எனப்படுகிறான். 'ஸத்யேஜ்யோதிஷி' என்பதற்கு ஸத்ய ஸ்வபாவமான ஜ்யோதிஸ்ஸில் என்பது பொருள்.

'ஆப: புனந்து' என்பதின்பொருள். ஆப: = அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலங்கள், புனந்து = சுத்திசெய்யவேண்டும். ப்ருதிவீம் = ப்ருதிவியை. பூமியின் அம்சம் அதிகமுள்ளதால், ப்ருதிவீ சப்தத்தால் ஸ்தூலசரீரம் சொல்லப்படுகிறது. ப்ருதிவீபூதா = சுத்தமாக்கப்பட்ட சரீரமானது, மாம்=லிங்கசரீராபிமானியான என்னைச் சுத்தம் செய்யவேண்டும். லிங்கசரீரத்திலுள்ள ராகம், த்வேஷம், பாபம் முதலிய மலங்களைப் போக்குவதால் சுத்தம்

धयताम् । 'पुनन्तु ब्रह्मणस्पतिः' । ब्रह्मणस्पतिः वेदस्य पालकः । ब्रह्मणस्पतिश्च भगवान् पुनातु । परं ब्रह्म विश्वतः पूतम् । ब्रह्मशब्देन वेदस्याकारः । वेदो वा ब्रह्म । यदुच्छिष्टम् = अशुद्धिकरं मलादि, यच्चाभोज्यं पतिताद्यन्नम्, यद्वा दुश्चरितं परदारगमनादिकम्, तन्निमित्तं सर्वमेनोजातं पुनन्तु आपः । असतां च द्रव्यप्रतिग्रहनिमित्तं पापं शोधयन्तु नाशयन्तु । सर्वस्माद्दोषात् मां स्वाहा = जुहोमि निरस्तसमस्तदोषे परमात्मनि एकीकरोमीत्यर्थः ॥

अत्र विष्णुः —

'जानुभ्यामुपरिष्टात्तु शुष्कवासाः स्थितो जले । सन्ध्यामाचमनं कुर्वन् शुचिरप्यशुचिर्भवेत्' इति ॥

---

செய்யவேண்டும். புனந்துப்ரம்ஹணஸ்பதி:=ப்ரம்ஹாவிற்குப் பதியாகிய பகவானும் சுத்தி செய்யவேண்டும். எங்கும் சுத்தமான பரப்ரம்ஹமும் சுத்தி செய்யவேண்டும். ப்ரம்ஹ சப்தத்தால் வேதமும் சொல்லப்படலாம். யதுச்சிஷ்டம்=அசுத்தியைச் செய்யும் மலம் முதலியது எதுவோ, அபோஜ்யம்=புஜிக்கத்தகாத பதிதாத்யன்னம் முதலியது எதுவோ, என்னைச் சேர்ந்த, துச்சரிதம்=பரதாரகமனம் முதலியது எதுவோ, அந்த நிமித்தமாய் உள்ள ஸகல பாபராசியையும் ஜலங்கள் சோதிக்கவேண்டும். அஸத்துக்களின் த்ரவ்யத்தை ப்ரதிக்ரஹித்ததாலுண்டாகிய பாபத்தையும் போக்கவேண்டும். ஸகல பாபங்களுமற்ற என்னை, ஸ்வாஹா=சேர்க்கிறேன், ஸகலவித தொந்திரையுமற்ற பரமாத்மாவினிடத்தில் ஒன்று சேர்க்கிறேன், என்பது பொருள். இங்கு,

**விஷ்ணு** :- உலர்ந்த வஸ்த்ரத்தைத் தரித்தவன், முழங்கால்களுக்கு மேலான ஜலத்தில் நின்று, ஸந்த்யாவந்தனம், ஆசமனம் இவைகளைச்செய்தால், தான் சுத்தனாயினும் அசுத்தனாவான்.

மந்த்ராசமநாநந்தரம் நாராயணஸ்து விசேஷமாஹ —

'அபிஷ்ட்வா வாபிஷ்டுதா தோயம் ஸ்ப்ருஷ்ட்வா ப்ரஹ்மமுகேந து । ஆபோஹிஷ்டேதி ஸூக்தேந குசைர்மூர்த்நி மார்ஜநமாசரேத்' இதி ॥ அபிஷ்டுத் = ஓங்கார: । ப்ரஹ்மமுகமபி மநுநோக்தம் — 'ஓங்காரபூர்விகாஸ்திஸ்ரோ மஹாவ்யாஹ்ருதயோऽவ்யயா: । த்ரிபதா சைவ காயத்ரீ விஜ்ஞேயா ப்ரஹ்மணோ முகம்' இதி । தேந தோயம் ஸ்ப்ருஷ்ட்வா தேந தோயேந ஆபோஹிஷ்டேதி ஸூக்தேந குசைர்மூர்த்நி மார்ஜநமாசரேதித்யர்த்த: ॥

காத்யாயநஸ்து — 'சிரஸோ மார்ஜநம் குர்யாத் குசை: ஸோதகபிந்துபி: । ப்ரணவோ பூர்புவஸ்ஸ்வச்ச காயத்ரீ ச த்ருதீயகா ॥ அப்தைவதம் த்ர்ய்ருசம் சைவ சதுர்த்தமிதி மார்ஜநே' இதி ॥

மந்த்ராசமநாநந்தரப்ரோக்ஷணம் பஹுஸ்ம்ருத்யநுரோதாச் சிஷ்டாசாராச்ச ஸர்வஸித்தாந்திஸம்மதத்வாச்ச

---

மந்த்ராசமனத்திற்குப்பிறகு விசேஷத்தைச் சொல்லுகிறார்,

**நாராயணர்:—** அபிஷ்டுத்தினாலும், ப்ரம்ஹமுகத்தாலும் ஜலத்தைத்தொட்டு, 'ஆபோஹிஷ்டா' என்ற ஸூக்தத்தினால், தர்ப்பங்களால் சிரஸ்ஸில் ப்ரோக்ஷணம் செய்யவேண்டும். அபிஷ்டுத் = ஓங்காரம். ப்ரம்ஹமுகமும் மனுவினால் சொல்லப்பட்டுள்ளது. ஓங்காரத்தை முதலிலுடைய மூன்று மஹாவ்யாஹ்ருதிகளும், மூன்று பாதங்களுடைய காயத்ரியும் ப்ரஹ்மத்தின் முகம் எனப்படுகிறது. அதனால் ஜலத்தைத்தொட்டு, அந்த ஜலத்தால் 'ஆபோஹிஷ்டா' என்ற ஸூக்தத்தினால், தர்ப்பங்களால் தலையில் மார்ஜனம் செய்யவேண்டுமென்று பொருள்.

**காத்யாயனரோவெனில்:—** "ஜலத் திவலைகளுடன்கூடிய குசங்களால் சிரஸ்ஸுக்கு ப்ரோக்ஷணம் செய்யவேண்டும். ப்ரணவம், பூர்ப்புவஸ்ஸுவ:, காயத்ரீ மூன்றாவது, ஆபோஹிஷ்டாதி மூன்று ருக்குகள் நான்காவது, இவை மார்ஜனமந்த்ரங்கள்" என்றார்.

மந்த்ராசமனத்திற்குப்பிறகு செய்யப்படும் ப்ரோக்ஷணமானது, அநேக ஸ்ம்ருதிகளை அனுஸரிப்பதாலும், சிஷ்டா

𑌭𑌿 𑌰𑌵𑌶𑍍𑌯𑌂 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌾 ‖ 𑌅𑌧𑌿𑌕𑌂 𑌤𑍁 𑌯𑌥𑌾𑌚𑌾𑌰𑌂 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌾 ‖

𑌅𑌸𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌃— '𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑍍𑌣𑍋 𑌅𑌕𑌾𑌰𑌿𑌷𑌮𑍍' । 𑌦𑌧𑌿 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍀𑌤𑌿 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑌾 । 𑌤𑌦𑌨𑍁𑌰𑌕𑍍𑌤𑍋 𑌦𑌧𑌿𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌕𑌶𑍍𑌚𑌿𑌦𑍍𑌦𑍇𑌵(𑌤𑌾)𑌵𑌿𑌶𑍇𑌷𑌃 । 𑌅𑌗𑍍𑌨𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑍇 । 𑌤𑌸𑍍𑌯 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌅𑌕𑌾𑌰𑌿𑌷𑌂 = 𑌅𑌹𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌕𑍃𑌤𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 । 𑌕𑍀𑌦𑍃𑌶𑌸𑍍𑌯? 𑌜𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 = 𑌜𑌯𑌶𑍀𑌲𑌸𑍍𑌯, 𑌅𑌶𑍍𑌵𑌸𑍍𑌯 = 𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑌃, 𑌵𑌾𑌜𑌿𑌨𑌃 = 𑌅𑌨𑍍𑌨𑌵𑌤𑌃 । 𑌸 𑌦𑍇𑌵𑌃 𑌨𑌃 𑌅𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌮𑍁𑌖𑌾 = 𑌮𑍁𑌖𑌂, 𑌸𑍁𑌰𑌭𑌿 𑌕𑌰𑌤𑍍 = 𑌕𑌰𑍍𑌪𑍂𑌰𑌾𑌦𑌿𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌸𑌂𑌪𑌤𑍍𑌤𑍍𑌯𑌾 𑌸𑍁𑌗𑌨𑍍𑌧𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌕𑌰𑍋𑌤𑍁 । 𑌨𑌃 = 𑌅𑌸𑍍𑌮𑌾𑌕𑌂, 𑌆𑌯𑍂𑌂𑌷𑌿 𑌚 𑌪𑍍𑌰𑌤𑌾𑌰𑌿𑌷𑌤𑍍 𑌵𑌰𑍍𑌧𑌯𑌤𑍍𑌵𑌿𑌤𑌿 । 𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑍈𑌵 '𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑍍𑌣𑍋 𑌪𑍁𑌨𑌾𑌤𑍀'𑌤𑌿 ‖

𑌮𑌾𑌰𑍍𑌜𑌨𑌾𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃— 𑌜𑌲𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌤𑌥𑌾

---

சாரத்தாலும், ஸுரபிமதீ, 'ஆபோஹிஷ்டா' முதலிய மூன்று ருக்குகள் இவைகளால் அவச்யம செய்யவேண்டும. இதைவிட அதிகமானால் அதை அவரவர் ஆசாரப்படி க்ரஹிக்கவும்

இதன் அர்த்தமோவென்னில்— 'ததிக்ராவ்ண்ணோ அகாரிஷம்'. தயிரினை அடைவதால் 'ததிக்ராவா' என்று பெயருள்ள, தயிரில் ப்ரீதியுள்ள ஒரு தேவன், அக்னி என்கின்றனர் சிலர். அந்தத் தேவனுக்கு, அகாரிஷம்=நான் கர்மத்தைச் செய்தவனாய் ஆகின்றேன். எவ்விதமாகியவனுக்கு? ஜிஷ்ணோ:= ஜயசீலனுக்கு, அச்வஸ்ய=வ்யாபித்தவனுக்கு, வாஜிந:=அன்னமுடையவனுக்கு. அந்தத்தேவன், ந:=எங்களுடைய, முகா= முகத்தை, ஸுரபிகரத்=கர்ப்பூரம் முதலிய நல்வாஸனையுள்ள த்ரவ்யஸம்பத்தைக் கொடுப்பதால் நல்வாஸனையுள்ளதாய்ச் செய்யவேண்டும. ந:=எங்களுக்கு, ஆயூம்ஷிச=வாழ்நாட்களையும், ப்ரதாரிஷத்=வ்ருத்திசெய்யவேண்டும். சுத்திஹேதுத் தன்மையும் ச்ருதியால் தெரிகிறது, 'ததிக்ராவ்ண்ணுபுநாதி' என்று. மார்ஜனத்திற்குப்பிறகு,

**ப்ரஜாபதி:**—ஜலத்தால் நிறைந்த கையை மூக்கின் நுனியில்

ஹஸ்தம் நாஸிகாக்ரே ஸமவேக்ஷயேத் । ருதஞ்சேதி த்ருசா தத: தஜ்ஜலம் தத: க்ஷிதௌ க்ஷிபேத்' இதி ॥

ததஸ்ஸூர்யாயார்க்யம் நிவேதயேத் । தத்ர சௌனக:—

'வ்யாஹ்ருத்யா ஸஹ காயத்ர்யா ஸந்த்யாம் ப்ரத்யஞ்ஜலிம் க்ஷிபேத்' இதி ॥

வ்யாஸோऽபி—

'கராப்யாம் தோயமாதாய காயத்ர்யா சாபிமந்த்ரிதம் । ஆதித்யாபிமுகஸ்திஷ்டந் த்ரிரூர்த்வம் விநிக்ஷிபேத்' இதி ॥

அத்ர விசேஷமாஹ ஹாரீத:—

'ஸாவித்ர்யாऽபிமந்த்ரிதமுதகம் புஷ்பமிச்ரமஞ்ஜலினா க்ஷிபேத்' இதி ॥

பிதாமஹ:—

'உபாப்யாம் தோயமாதாய ஹஸ்தாப்யாம் ஸாவதானத: । காயத்ர்யா மந்த்ரிதா சைவ: ப்ரணவவ்யாஹ்ருதிபூர்வ

---

வைக்கவும். 'ருதமச' என்ற மந்த்ரத்தைப்படித்து, அந்த ஜலத்தை பூமியில் விடவேண்டும்.

பிறகு ஸூர்யனின் பொருட்டு அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். அதில்,

**சௌனகர்**:—வ்யாஹ்ருதியுடனும், காயத்ரியுடனும், ஸந்த்யையைக்குறித்து ஜலாஞ்ஜலியை விடவேண்டும்.

**வ்யாஸரும்** :— கைகளால் ஜலத்தை எடுத்து, காயத்ரியால் அபிமந்த்ரித்து, ஸூர்யனுக்கு எதிராய் நின்று கொண்டு, மூன்று தடவை ஆகயத்தை உயர்த்திவிடவேண்டும்.

இங்கு விசேஷத்தைச் சொல்லுகிறார்,

**ஹாரீதர்** :—காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தைப் புஷ்பங்களுடன் கூடியதாய் அஞ்ஜலியால் விடவேண்டும்.

**பிதாமஹர்** :—கவனமுடையவனாய், இரு கைகளாலும் ஜலத்தை எடுத்து, ப்ரணவ வ்யாஹ்ருதிகளுடன்கூடிய காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட அந்த ஜலத்தை, ஸூர்யனுக்கு நேராய்

யா ॥ ரவேரபிமுகஸ்திஷ்டந் ஊர்த்வம் த்ரிஸந்த்யயோ: க்ஷிபேத்' இதி ॥

ஶங்க:—

'ஸந்த்யாத்ரயே து காயத்ர்யா ஸூர்யாயாஞ்ஜலிம் க்ஷிபேத் । ப்ராதர்மத்யாஹ்நயோஸ்திஷ்டந் ஸாயமாஸீந ஏவ வா ॥ மந்தேஹாநாம் வதார்தாய ப்ரக்ஷிபேதுதகாஞ்ஜலிம் । ப்ராயஶ்சித்தாசமாந்முச்யதே ரக்ஷோஹத்யயா ॥ ப்ரணவவ்யாஹ்ருதீபிஶ்ச க்ருத்வாऽऽத்மாநம் ப்ரதக்ஷிணம் । ஆசம்யைவ ததஸ்திஷ்டந் த்யாயேத் ஸந்த்யாம் ஸமாஹித:' இதி ॥

பாரிஜாதே— 'ஈஷந்நம்ர: ப்ரபாதே து மத்யாஹ்நே து ருஜுஸ்திதா । காயத்ர்யா ப்ரக்ஷிபேதர்க்யம் ஸாயந்தூபவிஶந் புவி ॥ கோஶ்ருங்கமாத்ரமுத்க்ஷிப்ய ரவிம் த்ருஷ்ட்வா ஜலாஞ்ஜலிம் । உபௌ பாதௌ ஸமௌ க்ருத்வா பார்ஷ்ணீ உத்த்ருத்ய விக்ஷிபேத்' இதி ॥

---

நின்றுகொண்டு, மூன்று தடவை, இரு ஸந்தயைகளிலும் உயர்த்திவிடவேண்டும்.

**சங்கரும்:—** மூன்று ஸந்த்யைகளிலும், ஸூர்யனின் பொருட்டு காயத்ரியால் அரகயத்தை விடவேண்டும். காலையிலும், மத்யாஹ்னத்திலும் நின்றுகொண்டும், மாலையில் உட்கார்ந்துகொண்டும விடவேண்டும். மந்தேஹர்கள் என்கிற ராக்ஷஸாகளின் வதத்திற்காக அஞ்ஜலியை விடவேண்டும் ப்ராயச்சித்தத்திற்காக ஆசமனம் செய்தால், ராக்ஷஸஹத்யாதோஷத்தால விடப்படுகிறான். ப்ரணவம், வ்யாஹ்ருதிகள் இவைகளால், தன்னை ப்ரதக்ஷிணம் செய்து, ஆசமனம செய்து, பிறகு நின்றவனாய், கவன முடையவனாய் ஸந்த்யையை த்யானிகக வேண்டும்.

**பாரிஜாதத்தில்:—** காலையில் கொஞ்சம் குனிந்து நிற்பவனாயும், மத்யாஹ்னத்தில் நேராய் நிற்பவனாயும், மாலையில் பூமியில் உட்கார்ந்தவனாயும், காயத்ரியால் அர்க்யத்தை விடவேண்டும். இரண்டு கால்களையும் ஸமமாய் வைத்துக்கொண்டு, குதிக்கால்களை உயாத்தி, ஸூர்யனைப்பார்த்துக்கொண்டு, மாட்டின் கொம்பளவு தூக்கி அர்க்யத்தை விடவேண்டும்.

संग्रहेऽपि —

'उभौ हस्तौ संहतौ कृत्वा पूरयेदुदकाञ्जलिम् । गोशृङ्गमात्रमुद्धृत्य जलमध्ये जलं क्षिपेत् ॥ जलेष्वर्घ्यं प्रदातव्यं जलाभावे शुचिस्थले । संप्रोक्ष्य वारिणा सम्यक्ततोऽर्घ्याणि प्रदापयेत् ॥ मुक्तहस्तेन दातव्यं मुद्रां तत्र न कारयेत् । तर्जन्यङ्गुष्ठयोगेन राक्षसी मुद्रिका स्मृता ॥ राक्षसीमुद्रिकादत्तं तत्तोयं रुधिरं भवेत्' इति ॥

भरद्वाजः —

'ततः प्रदक्षिणीकृत्य शुद्धे संप्रोक्षिते भुवि । शुचौ च दर्भसंकीर्णे वाग्यतः प्राङ्मुखः स्थितः ॥ दर्भान् धारयमाणस्तु आत्मध्यानपरो भवेत् । उपविश्य द्विराचम्य ग्रहादींस्तर्पयेत्ततः' इति ॥

योगयाज्ञवल्क्यः —

'बाह्यानि करणानि प्रत्याहृत्य अन्तःकरणं वा

---

**ஸங்க்ரஹத்திலும் :—** இரு கைகளையும் சேர்த்து ஒரு அஞ்ஜலி ஜலத்தைப் பூர்ணமாய்ச் செய்யவும். பசுவின் கொம்பளவு உயர்த்தி ஜலத்தின் நடுவில் அர்க்யத்தை விடவும். ஜலத்தில் அர்க்யத்தை விடவேண்டும். ஜலமில்லாவிடில் சுத்தமான ஸ்தலத்தை ஜலத்தால் ப்ரோக்ஷித்து அந்த இடத்தில் அர்க்யங்களைக் கொடுக்கவேண்டும். கைகளைப் பிரித்தவனாய்க் கொடுக்கவேண்டும். அக்காலத்தில் முத்ரையைச் செய்யக்கூடாது. தர்ஜனீ விரல் பெருவிரல் இரண்டும் சேர்ந்தால் ராக்ஷஸீ முத்ரை எனப்படுகிறது. அந்த முத்ரையுடன் கொடுக்கப்பட்ட ஜலம் ரக்தமாய் ஆகும்.

**பரத்வாஜர் :—** பிறகு ப்ரதக்ஷிணம் செய்து, ஜலத்தால் ப்ரோக்ஷிக்கப்பட்டதும், சுத்தமும், தர்ப்பம் உள்ளதுமான ஸ்தலத்தில், மௌனியாய், கிழக்கு நோக்கியவனாய் நின்று, தர்ப்பங்களைத் தரித்தவனாய், ஆத்மத்யானம் செய்யவேண்டும். பிறகு, உட்கார்ந்து, இருமுறை ஆசமனம் செய்து, நவக்ரஹங்கள் முதலியவரைத் தர்ப்பிக்கவேண்டும்.

**யோகயாக்ஞவல்க்யர் :—** வெளியிலுள்ள இந்த்ரியங்களை

த்வா ப்ரதிஷ்டாப்ய ஸ்படிகமணிகல்பே சித்ததர்பணே ப்ரதிபிம்பிதமாத்மாநம் உபாதேர் நிஷ்க்ருஷ்ய ஸ்வமஹிம்நி ஸ்திதம் ஸச்சிதாநந்தம் அஹமஸ்மீதி கிஞ்சித் காலம் த்யாயேத்' இதி ||

பிதாமஹ: — 'பாணிநா ஜலமாதாய ஸக்ருச்ச ப்ரயச்சேச்ச ப்ரதக்ஷிணம் | ஆதித்யாதீந் க்ரஹாம்ஸ்து தர்பயேத் ஸமாஹித:' இதி ||

ஜாபாலியோகயாஜ்ஞவல்க்யௌ —

'ஸந்த்யயோருபயோ: காலே த்யாத்வா விஷ்ணும் ஸநாதநம் | நிர்மலாத்மா ஸ்திதோ தர்பே காயத்ரீமாரபேத தத:' இதி ||

அர்க்யதாநே மந்த்ராந்தரம் விஷ்ணு: —

'கராப்யாமஞ்ஜலிம் க்ருத்வா ஜலபூர்ணம் ஸமாஹித: | உதுத்யமிதி மந்த்ரேண தத்தோயஞ்ச க்ஷிபேத்புவி || தத: ப்ரதக்ஷிணம் க்ருத்வா ஜலம் ஸ்ப்ருஷ்ட்வா விசுத்யதி | ஜலாபாவே

---

உள்ளிழுத்து, அந்த:கரணத்தையும் தன்னிடத்தில் நிறுத்தி, ஸ்படிகரத்னத்திற்குச் சமமான சித்தமெனும் கண்ணாடியில் ப்ரதிபிம்பித்துள்ள ஆத்மாவை உபாதியினின்றும் வெளியேற்றி, தனது மஹிமையிலுள்ள ஸச்சிதானந்த வஸ்துவாக நான் இருக்கிறேன் என்று கொஞ்ச காலம் த்யானிக்க வேண்டும்.

**பிதாமஹர்** :— கையால் ஜலத்தை எடுத்து, ஒருமுறை ப்ரதக்ஷிணம் செய்யவும். கவனமுடையவனாய், ஆதித்யன் முதலிய க்ரஹங்களைத் தர்ப்பிக்கவும்.

**ஜாபாலியும், யோகயாக்ஞவல்க்யரும்** :— இரண்டு ஸந்த்யா காலத்திலும், தர்ப்பத்தில் நின்றவனாய், நிர்மலசித்தனாய் நித்யனான விஷ்ணுவை த்யானித்து, பிறகு காயத்ரியைத் துவக்க வேண்டும்.

அர்க்யதானத்தில் வேறு மந்த்ரத்தைச் சொல்லுகிறார்,

**விஷ்ணு** :— இரு கைகளையும் சேர்த்து, அந்த அஞ்ஜலியை ஜலத்தால் நிரப்பி, கவனமுடையவனாய், 'உதுத்யம்' என்ற மந்த்ரத்தால், அந்த ஜலத்தைப் பூமியில் விடவும். பிறகு ப்ரத

மஹாமார்கே பந்தநே அஶுசாவபி ॥ உபயோஸ்ஸந்த்ய யோ: காலே ரஜஸா வாऽர்க்யம் ப்ரக்ஷிபேத் । ததபாவேऽபி ஸூர்யஸ்ய த்யாநமேவ ஸமாசரேத்' இதி ॥

காத்யாயந:—

'உத்தாயார்கம் ப்ரதி ப்ராஸ்ய த்ரிகமஞ்ஜலிமம்பஸ: । உச்சித்ரமித்யநேநைவ உபதிஷ்டேதநந்தரம்' இதி ॥

ஸ்ம்ருத்யந்தரேऽபி— 'உதுத்யம் சித்ரம் தச்சக்ஷுருபஸ்தாய த்ரிபிஸ்ததா । ஸந்த்யயோருபயோஸ்ஸூர்யம் காயத்ரீஜபமாரபேத்' இதி ॥

ஶாதாதப:—

'தர்பஹீநா து யா ஸந்த்யா யச்ச தாநம் விநோதகம் । அஸங்க்யாதம் து யஜ்ஜப்தம் தத்ஸர்வம் ஸ்யாந்நிரர்த்தகம் ॥ ஸந்த்யாதிக்ரமணே யஸ்ய ஸப்தராத்ரம் பவிஷ்யதி । உந்மத்ததோஷயுக்தோऽபி புநஸ்ஸம்ஸ்காரமர்ஹதி' இதி ॥

---

க்ஷிணம செய்து, ஜலத்தைத தொட்டு சுத்தனுகிறுன். ஜலமில்லாவிடினும், பெரிய வழியிலும், காராக்ருஹத்திலும், அசுத்தியிலும், இரண்டு ஸந்த்யா காலங்களிலும் புழுதியாலாவது அர்க்யத்தை விடவேண்டும அதுவுமில்லாவிடில், ஸூர்ய த்யானத்தையே செய்யவேண்டும

**காத்யாயனரோவெனில்** :— எழுந்து, ஸூர்யனைக்குறித்து மூன்று அர்க்யம் விட்டு, பிறகு 'உதுத்யம்' 'சித்ரம்' என்ற மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்யவேண்டும்.

**மற்ருெரு ஸ்ம்ருதியிலும்** :— இரண்டு ஸந்த்யைகளிலும், 'உதுத்யம்' 'சித்ரம' 'தச்சக்ஷு:' என்ற மூன்று மந்த்ரங்களால் உபஸ்தானம் செய்து, காயத்ரீஜபத்தை ஆரம்பிக்கவும்

**சாதாதபர்** :— தர்ப்பமில்லாமல் செய்த ஸந்த்யோபாஸனமும், ஜலமில்லாமல் கொடுத்த தானமும், கணக்கிடாமல் ஜபித்த ஜபமும் முழுவதும் பயனற்றதாகும். எவன் ஏழுநாள் ஸந்த்யாவந்தனம் செய்யவில்லையோ, அவன் உன்மாத தோஷமுள்ளவனுயினும் புனருபநயனத்திற்கு அர்ஹனுகிறுன்.

அத ப்ரயோகக்ரம:—

பாதௌ ஹஸ்தௌ ப்ரக்ஷால்ய த்விராசம்ய தர்ப்பபாணி: ப்ராணாநாயம்ய ப்ராதஸ்ஸந்த்யாமுபாஸிஷ்ய இதி ஸங்கல்ப்ய வாரிணா புண்ட்ரம் த்ருத்வா, ஆபோஹிஷ்டேதி மந்த்ரஸ்ய ஸிந்துத்வீப ருஷி: காயத்ரீ சந்த: ஆபோ தேவதா இதி ஶிரோமுகஹ்ருதயேஷு விந்யஸ்ய ப்ரோக்ஷணே விநியோக இதி விநியோகம் ஸ்ம்ருத்வா மந்த்ரார்த்தாநுஸ்மரணபூர்வகம் ஆபோஹிஷ்டேதி த்ருசஸ்யாதிஸ்திதை: பாதைஸ்ஸப்ரணவைஸ்ஸஹிதைர்வா ஸப்தவிப்ருஷ: ஶிரஸி ப்ரோக்ஷ்ய அஷ்டமேந விப்ருஷம் பாதயோ: ப்ரோக்ஷ்ய நவமேந ஶிரஸி ப்ரோக்ஷ்ய ஸப்ரணவவ்யாஹ்ருத்யாத்மாநம் பரிஷிஞ்சேத் । ததஸ்ஸூர்யஶ்சேத்யநுவாகஸ்ய அக்நிர்ருஷி: காயத்ரீ சந்த: ஸூர்யோ தேவதா ஆசமநே விநியோக இதி பூர்வவத்விந்யஸ்ய, விநியோகம் ஸ்ம்ருத்வா அர்த்தாநுஸ்மர

---

இங்கு ப்ரயோகத்தின் க்ரமம் சொல்லப்படுகிறது.

கால் கைகளை அலம்பி, இருமுறை ஆசமனம் செய்து, தர்ப்பபாணியாய் ப்ராணாயாமம் செய்து, 'ப்ராதஸ்ஸந்த்யாம் உபாஸிஷ்யே' என்று ஸங்கல்ப்பித்து, ஜலத்தால் புண்ட்ரம் தரித்து, ஆபோஹிஷ்டேதி மந்த்ரஸ்ய ஸிந்துத்வீப: ருஷி:, காயத்ரீ சந்த:, ஆபோ தேவதா என்று சிரஸ், முகம், மார்பு இவைகளில் ந்யஸித்து 'ப்ரோக்ஷணே விநியோக:' என்று விநியோகத்தை ஸ்மரித்து, மந்த்ரார்த்தங்களின் ஸ்மரணத்துடன், 'ஆபோஹிஷ்ட' முதலிய மூன்று ருக்குகளின் முதலில் உள்ள, ப்ரணவத்துடன் கூடிய, அல்லது ப்ரணவம் சேராத, ஏழு பாதங்களால் ஏழு திவலைகளை சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்து, எட்டாவது பாதத்தால் ஒரு திவலையை பாதத்தில் ப்ரோக்ஷித்து, ஒன்பதாவது பாதத்தால் ஒரு திவலையை சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்து, ப்ரணவத்துடன் கூடிய வ்யாஹ்ருதியால் ஜலத்தால் தன்னைச்சுற்றவும் பிறகு, 'ஸூர்யஶ்ச' என்ற அனுவாகத்திற்கு அக்னி ருஷி, காயத்ரீ சந்தஸ், ஸூர்யன் தேவதை, ஆசமனத்தில் விநியோகம் என்று முன்போல் ந்யஸித்து, விநியோகத்தையும் ஸ்மரித்து, அர்த்த ஸ்மரணத்துடன் 'ஸூர்யஶ்ச'

𑌣𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌶𑍍𑌚𑍇𑌤𑍍𑌯𑌨𑍇𑌨𑌾𑌭𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌤𑌾 𑌆𑌪𑌃 𑌪𑍀𑌤𑍍𑌵𑌾 𑌦𑍍𑌵𑌿𑌰𑌾𑌚𑌾𑌮𑍇𑌤𑍍 । 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑍍𑌣𑍍𑌣 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵 𑌋𑌷𑌿𑌃 𑌅𑌨𑍁𑌷𑍍𑌟𑍁𑌪𑍍𑌛𑌨𑍍𑌦𑌃 𑌵𑌿𑌶𑍍𑌵𑍇𑌦𑍇𑌵𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾, 𑌦𑌧𑌿𑌕𑍍𑌰𑌾𑌵𑌾 𑌵𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾, 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌣𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗 𑌇𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌅𑌨𑌯𑌾 𑌋𑌚𑌾 𑌆𑌪𑍋𑌹𑌿𑌷𑍍𑌠𑌾𑌦𑌿𑌤𑌿𑌸𑍃𑌭𑌿𑌶𑍍𑌚 𑌪𑌾𑌦𑌶𑍋 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌷𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑌵𑌦𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌪𑌰𑌿𑌷𑌿𑌞𑍍𑌚𑍇𑌤𑍍 । 𑌤𑌤𑌃 𑌅𑌰𑍍𑌘𑍍𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌂 𑌕𑌰𑌿𑌷𑍍𑌯 𑌇𑌤𑌿 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌶𑍍𑌚 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣𑌰𑍍𑌷𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌂 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌤𑌦𑌰𑍍𑌥𑌂 𑌚 𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌵𑌾 𑌅𑌭𑌿𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌤𑌂 𑌜𑌲𑌾𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌯𑌾𑌰𑍍𑌘𑍍𑌯𑌂 𑌤𑍍𑌰𑌿𑌰𑍁𑌤𑍍𑌕𑍍𑌷𑌿𑌪𑍇𑌤𑍍 । 𑌤𑌤 𑌆𑌚𑌮𑍍𑌯 𑌸𑌜𑌲𑍇𑌨 𑌪𑌾𑌣𑌿𑌨𑌾 𑌸𑌕𑍃𑌦𑌾𑌤𑍍𑌮𑌪𑍍𑌰𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾𑌽𑌸𑌾𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌹𑍃𑌦𑌯𑌮𑌭𑌿𑌮𑍃𑌶𑍍𑌯𑌾𑌚𑌮𑍍𑌯 𑌯𑌥𑌾𑌚𑌾𑌰𑌂 𑌗𑍍𑌰𑌹𑌾𑌦𑍀𑌂𑌸𑍍𑌤𑌰𑍍𑌪𑌯𑍇𑌤𑍍' 𑌇𑌤𑌿 ॥

## 𑌜𑌪𑌦𑍇𑌶𑌾𑌸𑌨𑌾𑌦𑌿𑌵𑌿𑌧𑌿𑌃 ॥

𑌜𑌪𑌦𑍇𑌶𑌮𑌾𑌹 𑌯𑍋𑌗𑌯𑌾𑌜𑍍𑌞𑌵𑌲𑍍𑌕𑍍𑌯𑌃—'𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑌗𑌾𑌰𑍇 𑌜𑌲𑌾

---

*என்ற அனுவாகத்தால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலத்தைப் பருகி, இருமுறை ஆசமனம் செய்யவேண்டும். 'ததிக்ராவ்ண்ண:' என்ற மந்த்ரத்திற்கு, வாமதேவர் ருஷி, அனுஷ்டுப் சந்தஸ், விச்வேதேவர், அல்லது ததிக்ராவா தேவதை, ப்ரோக்ஷணத்தில் விநியோகம் என்று முன்போல் ந்யஸித்து, இந்த ருக்கினாலும், 'ஆபோஹிஷ்ட' முதலியவையாலும் பாதம் பாதமாய் ப்ரோக்ஷித்து, முன்போல் தன்னை ஜலத்தால் சுற்றவும். பிறகு 'அர்க்யப்ரதானமகரிஷ்யே' என்று ஸங்கல்ப்பித்து, காயத்ரியின் (சொல்லப்போகிற) ருஷிமுதலியதை ந்யஸித்து, அர்த்தத்தையும் ஸ்மரித்து, காயத்ரியால் அபிமந்த்ரிக்கப்பட்ட ஜலாஞ்ஜலியை, ஸூர்யனுக்கு அர்க்யமாய மூன்று முறை உயர்த்தி விடவேண்டும். பிறகு, ஆசமனம் செய்து, ஜலத்துடன் கூடிய கையுடன் ஒரு முறை ஆத்மப்ரதக்ஷிணம் செய்து, 'அஸாவாதித்யோ ப்ரஹ்ம' என்று ஆத்ம த்யானம் செய்து, மார்பைத் தொட்டு ஆசமனம் செய்து, அவரவர் ஆசாரப்படி நவக்ரஹங்களை முதலியவரைத் தர்ப்பிக்கவேண்டும்.*

## ஜபதேச ஆஸநாதி விதி.

*ஜபதேசத்தைச் சொல்லுகிறார்,*

**யோகயாக்ஞவல்க்யர்:-** *அக்னி சாலை, ஜல ஸமீபம், தேவால*

ஹவா ஜபேத்தேவாலயேऽபி வா । புண்யதீர்த்தே கவாம் கோஷ்டே ஸித்தக்ஷேத்ரேऽதவா க்ருஹே' இதி ॥

ஸ்ம்ருதிரத்நே—

'ஸூர்யாக்நிருத்ரதேவாநாம் குரூணாமபி ஸந்நிதௌ । அந்யேஷாம் ச ப்ரஶஸ்தாநாம் ஸம்முகேऽத வா ஜபேத் ॥ அஶ்வத்தபில்வதுலஸீவநபுஷ்பாராமாவ்ருதே' இதி ॥

ஸ்ம்ருதிஸாரே—

'ஸூர்யஸ்யாக்நேர்குரோரிந்தோர் தீபஸ்ய ச ஜலஸ்ய ச । விப்ராணாம் ச கவாம் சைவ ஸந்நிதௌ ஶஸ்யதே ஜப:' இதி ॥

ஶங்க:—

'க்ருஹே த்வேககுணம் ப்ரோக்தம் நத்யாதௌ த்விகுணம் ஸ்ம்ருதம் । கவாம் கோஷ்டே தஶகுணமக்ந்யாகாரே ஶதாதிகம் ॥ ஸித்தக்ஷேத்ரேஷு தீர்த்தேஷு தேவதாயாஶ்ச ஸந்நிதௌ । ஸஹஸ்ரம் ஶதகோடீநாமநந்தம் விஷ்ணுஸந்நிதௌ' இதி ॥

---

யம், புண்ய தீர்த்தம், பசுக கொட்டில், ஸித்தரின் க்ஷேத்ரம, தனது க்ருஹம் இவைகளுள் ஒன்றில் ஜபம் செய்யவும்

**ஸ்ம்ருதிரத்னத்தில்:-** ஸூர்யன், அக்னி, ருத்ரன், தேவர்கள், குருக்கள் இவர்களின் ஸன்னிதியில், சிறந்த மற்றவருக்கு எதிரிலாவது ஜபிக்கவும் அச்வத்தம், பில்வம், துளஸீவனம், புஷ்பங்கள் இவைகளால் சூழப்பட்ட இடத்திலாவது ஜபிக்கவும்.

**ஸ்ம்ருதிஸாரத்தில்:—** ஸூர்யன், அக்னி, குரு, சந்த்ரன், தீபம், ஜலம், ப்ராம்ஹணர், பசுக்கள் இவரது எதிரில் ஜபம் செய்வது புகழப்படுகிறது.

**சங்கர் :—** க்ருஹத்தில் செய்வது ஒரு பங்கு பலமுள்ளது. நதி முதலியதில் செய்வது இரண்டு பங்கு பலமுடையதாகும். பசுக்களின் கொட்டிலில் செய்வது பத்து மடங்கு பலமுடையது. அக்னிசாலையில் செய்வது நூறுமடங்கு பலமுடையது. ஸித்த க்ஷேத்ரங்கள், புண்யதீர்த்தங்கள், தேவதையின் ஸன்னிதி இவைகளில் செய்வது நூறுகோடிகளின் ஆயிரம் மடங்கு பலமுடையது. விஷ்ணு ஸன்னிதியில் செய்வது அழிவற்றதாகும்.

𑌵𑍍𑌯𑌾𑌸𑍋𑌽𑌪𑌿—

'𑌗𑍁𑌹𑍍𑌯𑌕𑌾 𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌾𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌃 𑌹𑌰𑌨𑍍𑌤𑌿 𑌪𑍍𑌰𑌸𑌭𑌂 𑌯𑌤𑌃 । 𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑍇 𑌗𑍁𑌹𑍍𑌯𑌦𑍇𑌶𑍇 𑌤𑍁 𑌤𑌸𑍍𑌮𑌾𑌜𑍍𑌜𑌪𑍍𑌯𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌅𑌙𑍍𑌗𑌿𑌰𑌾 𑌅𑌪𑌿—

'𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌾𑌨𑌿 𑌚 𑌦𑌾𑌨𑌾𑌨𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚 𑌨𑌿𑌰𑌹𑌙𑍍𑌕𑍃𑌤𑌮𑍍 । 𑌜𑌪𑍍𑌯𑌾𑌨𑌿 𑌚 𑌸𑍁𑌗𑍁𑌪𑍍𑌤𑌾𑌨𑌿 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌫𑌲𑌮𑌨𑌨𑍍𑌤𑌕𑌮𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌶𑍌𑌨𑌕𑌃—

'𑌆𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌾 𑌆𑌶𑍇𑌷𑌾 𑌆𑌲𑍋𑌕𑌾𑌲𑍋𑌕𑌪𑌰𑍍𑌵𑌤𑌾𑌤𑍍 । 𑌯𑍇 𑌵𑌸𑌨𑍍𑌤𑌿 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾 𑌦𑍇𑌵𑌾𑌸𑍍𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌮𑍋 𑌨𑌮𑌃 ॥ 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌸𑌮𑍁𑌚𑍍𑌚𑌾𑌰𑍍𑌯 𑌨𑌮𑌸𑍍𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑍁𑌰𑌾𑌨𑍍 𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍍 ॥ 𑌅𑌪𑌸𑌰𑍍𑌪𑌨𑍍𑌤𑍁 𑌤𑍇 𑌭𑍂𑌤𑌾 𑌯𑍇 𑌭𑍂𑌤𑌾 𑌭𑍂𑌮𑌿 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌃 । 𑌯𑍇 𑌭𑍂𑌤𑌾 𑌵𑌿𑌘𑍍𑌨𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌸𑍍𑌤𑍇 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑍁 𑌶𑌿𑌵𑌾𑌜𑍍𑌞𑌯𑌾 ॥ 𑌤𑍇𑌨𑍈𑌵 𑌵𑌾𑌮𑌪𑌾𑌦𑌸𑍍𑌯 𑌭𑍂𑌮𑍌 𑌪𑌾𑌤𑌤𑍍𑌰𑌯𑌂 𑌚𑌰𑍇𑌤𑍍 ॥ 𑌉𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑍁 𑌭𑍂𑌤𑌪𑌿𑌶𑌾𑌚𑌾𑌦𑍍𑌯𑌾 𑌯𑍇 𑌚𑍈𑌤𑍇 𑌭𑍂𑌮𑌿(𑌭)𑌭𑌾𑌰𑌕𑌾𑌃 । 𑌏𑌤𑍇𑌷𑌾𑌮𑌵𑌿𑌰𑍋𑌧𑍇𑌨 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌕𑌰𑍍𑌮 𑌸𑌮𑌾𑌰𑌭𑍇 ॥ 𑌸𑌙𑍍𑌕

---

**வ்யாஸரும்** :— குஹ்யகர், ராக்ஷஸர், ஸித்தர் இவர்கள் பலாத்காரமாய் ஜபத்தை அபஹரிக்கின்றனர். ஆகையால் ஏகாந்த ஸ்தலத்தில் மறைவுள்ள இடத்தில் ஜபத்தைச் செய்ய வேண்டும்.

**அங்கிரஸ்ஸும்** :— மறைத்துக் கொடுக்கப்பட்ட தானங்கள், அஹங்காரமற்ற க்ஞானம, மறைத்துச் செய்யப்பட்ட ஜபங்கள் எவையோ, அவைகளின் பலம் அழிவற்றதாகும்.

**சௌனகர்** :— 'ஆப்ரம்ஹலோகா + நமோநம;' என்ற மந்த்ரத்தை உச்சரித்து, தேவர்களையும் ப்ராம்ஹணர்களையும் நமஸ்கரிக்கவும். இதன் பொருள்:—'மேல் ப்ரம்ஹலோகம் வரை, கீழ் சேஷலோகம் வரை, பூமியில் லோகாலோகபர்வதம் வரையிலும் எந்த ப்ராஹ்மணர்களும் தேவர்களும் வஸிக்கின்றனரோ அவர்களுக்கு நித்யமும் நமஸ்காரம் நமஸ்காரம்' என்பது. பிறகு, 'அபஸர்ப்பந்து + சிவாக்ஞயா' என்ற மந்த்ரத்தால், பூமியில் இடது காலினால் மூன்று முறை உதைக்கவும்.

ध्यात्वैवं जपेत्सम्यङ्मन्त्रार्थगतमानसः । कुशाजिनाम्बरैर्युक्तं कल्पयेदासनं बुधः ॥ वंशेष्टकाश्मधरणीतृणपल्लवनिर्मितम् । वर्जयेदासनं धीमान् दारिद्र्यव्याधिदुःखदम् । सर्वसिद्ध्यै व्याघ्रचर्म ज्ञानसिद्ध्यै मृगाजिनम् । नादीक्षितस्य गृहिणः कृष्णसाराजिनं स्मृतम् । [illegible]र्वनस्थश्च ब्रह्मचारी मृगाजिने । वस्त्रासनं रोगहरं कम्बलं दुःखमोचनम् ॥ स्वस्तिकाद्यासनेनाथ विशेत्तत्र स्थिराग्रधीः । वीरासनं स्वस्तिकं वा बद्ध्वाऽन्यतरदासनम् ॥ पद्मं वा मुक्तकं वाऽपि बद्ध्वा जपमारभेत् इति ॥

---

‘உக்ரபூத + ஸமாரபே’ என்று ஸங்கல்ப்பித்து, மந்த்ரார்த்தத்தை நாடிய மன முடையவனாய் ஜபிக்கவேண்டும். ‘அபஸர்ப்பந்து’ என்பதின் பொருள்:- எந்தப்பூதங்களிங்கு பூமியிலிருக்கின்றனவோ, அவைகள் விரைந்து செல்லவேண்டும். விக்னம்செய்யும் பூதங்கள்எவையோ அவைகள் சிவனின் ஆக்ஞையால் இங்கிருந்து செல்லவேண்டும ‘உக்ரபூத’ என்பதின் பொருள்:- ‘உக்ரமான பூதப்ரேதபிசாசங்கள் முதலிய எவர் பூமியை தரித்திருக்கின்றனரோ இவர்களுக்கு விரோதமில்லாமல் ஜபகர்மத்தை ஆரம்பிக்கின்றேன்’ என்று குசம், க்ருஷ்ணாஜினம், வஸ்த்ரம் இவைகளுடன் சேர்ந்த ஆஸனத்தைச் செய்துகொள்ளவும். மூங்கில், செங்கல்,கல், மண், புல், தளிர் இவைகளால் செய்யப்பட்ட ஆஸனத்தை அறிந்தவன் வர்ஜிக்கவேண்டும். அவை தரித்ரத்தன்மை, வ்யாதி, துக்கம் இவைகளைக் கொடுப்பதாகும். புலியின் தோல் எல்லா ஸித்திகளையும் செய்யும். மானின்தோல் ஜ்ஞானத்தை அளிக்கும். தீக்ஷிதனல்லாத க்ருஹஸ்தனுக்கு, க்ருஷ்ணஸார ம்ருகத்தின் தோல் கூடாது. யதியும், வானப்ரஸ்தனும் மான்தோலில் உட்காரலாம். வஸ்த்ராஸனம் ரோகத்தை ஹரிக்கும். கம்பளாஸனம் துக்கத்தை அகற்றும். விஹிதமான ஆஸனத்தில், ஸ்வஸ்திகம் முதலான ஆஸனத்தால் ஏகாக்ர சித்தனாய் உட்காரவேண்டும். வீராஸனம், ஸ்வஸ்திகாஸனம், பத்மாஸனம், முக்தகாஸனம் என்றவைகளுள் ஏதாவது ஒரு ஆஸனத்தைச் செய்து ஜபத்தை ஆரம்பிக்கவேண்டும்.

𑌆𑌸𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌶𑍌𑌨𑌕𑍇𑌨 — '𑌏𑌕𑌂 𑌪𑌾𑌦𑌮𑌥𑍈𑌕𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑍋𑌰𑍁𑌣𑌿 𑌸𑌂𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 । 𑌇𑌤𑌰𑌸𑍍𑌮𑌿𑌂𑌸𑍍𑌤𑌥𑌾 𑌚𑍋𑌰𑍁𑌂 𑌵𑍀𑌰𑌾𑌸𑌨𑌮𑍁𑌦𑌾𑌹𑍃𑌤𑌮𑍍 ॥ 𑌜𑌾𑌨𑍂𑌰𑍍𑌵𑍋𑌰𑌨𑍍𑌤𑌰𑍇 𑌸𑌮𑍍𑌯𑌕𑍍𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌦𑌤𑌲𑍇 𑌉𑌭𑍇 । 𑌋𑌜𑍁𑌕𑌾𑌯𑌸𑍍𑌸𑌮𑌾𑌸𑍀𑌨𑌃 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿𑌕𑌂 𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 ॥ 𑌊𑌰𑍍𑌵𑍋𑌰𑍁𑌪𑌰𑌿 𑌵𑌿𑌪𑍍𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌪𑌾𑌦𑌤𑌲𑍇 𑌉𑌭𑍇 । 𑌪𑌦𑍍𑌮𑌾𑌸𑌨𑌂 𑌭𑌵𑍇𑌦𑍇𑌤𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌪𑌿 𑌪𑍂𑌜𑌿𑌤𑌮𑍍 ॥ 𑌸𑌂𑌪𑍀𑌡𑍍𑌯 𑌸𑍀𑌵𑌨𑍀𑌂 𑌦𑌕𑍍𑌷𑌾𑌂 𑌗𑍁𑌲𑍍𑌫𑍇𑌨𑍈𑌵 𑌤𑍁 𑌸𑌵𑍍𑌯𑌤𑌃 । 𑌸𑌵𑍍𑌯𑌂 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌗𑍁𑌲𑍍𑌫𑍇𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌸𑌨𑌮𑍁𑌦𑍀𑌰𑌿𑌤𑌮𑍍 ॥ 𑌏𑌵𑌮𑌾𑌸𑌨𑌮𑌾𑌸𑍍𑌥𑌾𑌯 𑌭𑍂𑌤𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍' 𑌇𑌤𑌿 ॥

𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌦𑍇𑌵𑌤𑌾𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌕𑌾𑌯𑌾𑌮𑍍 —

𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾 𑌮𑍇𑌰𑍁𑌪𑍃𑌷𑍍𑌠 𑌋𑌷𑌿𑌃 । 𑌸𑍁𑌤𑌲𑌂 𑌛𑌨𑍍𑌦𑌃 । 𑌕𑍂𑌰𑍍𑌮𑍋 𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌆𑌸𑌨𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌪𑍃𑌥𑍍𑌵𑌿 𑌤𑍍𑌵𑌯𑌾 𑌧𑍃

---

ஆஸனங்களின் லக்ஷணத்தைச் சொல்லுகிறார்,

சௌனகரே:— ஒரு துடையின்மேல் மற்றொரு பாதத்தையும், மற்றொரு பாதத்தின்மேல் மற்றொரு துடையையும் வைத்து உட்காருவது 'வீராஸனம்' எனப்பட்டது. முழங்கால், துடை இவைகளின் நடுவில் இரண்டு பாதங்களையும் வைத்துக்கொண்டு ருஜுவான சரீரத்துடன் உட்கார்ந்திருப்பது 'ஸ்வஸ்திகம்' என்னும் ஆஸனமென்று சொல்லுகின்றனர். இரண்டு துடைகளின் மேல், இரண்டு பாதங்களையும் வைத்து உட்காருவது 'பத்மாஸனம்' எனச்சொல்லவும். இது எல்லா ஆஸனங்களிலும் சிறந்தது. வலது ஸீவனியை (குஹ்யத்திற்குக் கீழ்உள்ள ஸூத்ரம்) இடது காலின் குல்பத்தால் (மணிக்கட்டால்) நெருக்கியும், இடது ஸீவனியை வலதுகாலின் குல்பத்தால் நெருக்கியும் உட்காருவது 'முக்தாஸனம' எனப்பட்டது இவ்விதம் ஆஸனத்திலிருந்து, பூத சுத்தியைச் செய்யவேண்டும்.

**மந்த்ரதேவதா ப்ரகாசிகையில் :—** 'ப்ருத்வி' என்பதற்கு, மேருப்ருஷ்டர் ருஷி, ஸுதலம் சந்தஸ், கூர்மன் தேவதை, உட்காருவதில் விநியோகம். 'ப்ருத்வித்வயா + சாஸனம் குரு'. (இதன் பொருள்:—ஓ பூதேவி! உன்னால் உலகங்கள் தரிக்கப்

𑌤𑌾 𑌲𑍋𑌕𑌾 𑌦𑍇𑌵𑌿 𑌤𑍍𑌵𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌨𑌾 𑌧𑍃𑌤𑌾 । 𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌧𑌾𑌰𑌯 𑌮𑌾𑌂 𑌦𑍇𑌵𑌿 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌕𑍁𑌰𑍁 𑌚𑌾𑌸𑌨𑌮𑍍' 𑌇𑌤𑍍𑌯𑌾𑌸𑌨𑌂 𑌪𑌰𑌿𑌕𑌲𑍍𑌪𑍍𑌯 𑌹𑍃𑌦𑌿 '𑌗𑍁𑌰𑍁𑌭𑍍𑌯𑍋 𑌨𑌮𑌃' 𑌇𑌤𑍍𑌯𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 '𑌗𑌣𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍍𑌯𑍈 𑌨𑌮𑌃' 𑌇𑌤𑌿 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌂𑌸𑍇 '𑌦𑍁𑌰𑍍𑌗𑌾𑌯𑍈 𑌨𑌮𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌪𑌾𑌲𑌾𑌯 𑌨𑌮𑌃' 𑌇𑌤𑌿 𑌸𑌵𑍍𑌯𑌾𑌂𑌸𑍇𑌽𑌞𑍍𑌜𑌲𑌿𑌂 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌭𑍂𑌤𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

𑌧𑌰𑍍𑌮𑌕𑌨𑍍𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌨𑌾𑌳𑌂 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌷𑍍𑌟𑌦𑌳𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌿𑌕𑌂 𑌹𑍃𑌦𑌯𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌕𑍁𑌡𑍍𑌮𑌲𑌂 𑌪𑍍𑌰𑌣𑌵𑍇𑌨 𑌵𑌿𑌕𑌸𑌿𑌤𑌂 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌕𑌰𑍍𑌣𑌿𑌕𑌾𑌸𑍍𑌥𑌂 𑌚𑍈𑌤𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 𑌜𑍀𑌵𑌂 𑌪𑍍𑌲𑍁𑌤𑌪𑍍𑌰𑌣𑌵𑍋𑌚𑍍𑌚𑌾𑌰𑌣𑍇𑌨 𑌸𑍁𑌷𑍁𑌮𑍍𑌨𑌾𑌨𑌾𑌡𑍀𑌮𑌾𑌰𑍍𑌗𑍇𑌣 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌾𑌮𑍍𑌯 𑌤𑌂 𑌜𑍀𑌵𑌂 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑌸𑌹𑌸𑍍𑌰𑌦𑌳𑌕𑌮𑌲𑌨𑌿𑌷𑍍𑌠𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌸𑌹 𑌹𑌂𑌸 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌣𑍈𑌕𑍀𑌕𑍃𑌤𑍍𑌯 𑌸𑍍𑌵𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌕𑍁𑌕𑍍𑌷𑌿𑌜𑌾𑌤𑌂 𑌪𑌾𑌪𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌕𑌾𑌰𑍇𑌣 𑌵𑌿𑌭𑌾𑌵𑍍𑌯 𑌶𑍋𑌷𑌣𑌦𑌾𑌹𑌨𑌪𑍍𑌲𑌾𑌵𑌨𑌾𑌨𑌿 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 ॥

---

படுகின்றன. நீ விஷ்ணுவினுல் தரிக்கப்பட்டிருக்கிறுய் பூதேவி! நீ என்னையும் தரிக்கவேண்டும். ஆஸனத்தையும் சுத்தமாய்ச் செய்யவேண்டும், என்பது.) என்ற மந்த்ரத்தால் ஆஸனத்தைக் கற்பித்து, மார்பில் 'குருப்யோ நம:' என்று அஞ்ஜலியைச் செய்து, 'கணபதயே நம:, ஸரஸ்வத்யை நம:' என்று வலது தோளிலும், 'துர்காயை நம:, க்ஷேத்ரபாலகாய நம:' என்று இடது தோளிலும் அஞ்ஜலியைச்செய்து, பூதசுத்தியைச் செய்யவும்.

தர்மத்தைக் கிழங்காயுடையதும், ஜ்ஞானத்தைத் தண்டாக உடையதும், ஐச்வர்யங்களை எட்டு தளங்களாயுடையதும், வைராக்யத்தைக் கர்ணிகை (தாது) யாய் உடையதுமான ஹ்ருதயபத்ம முகுளத்தை, ப்ரணவத்தால் மலர்ந்ததாக த்யானித்து, கர்ணிகையிலிருக்கும் சைதன்ய ஸ்வரூபியான ஜீவனை, ப்லுதமான ப்ரணவத்தை உச்சரிப்பதால் ஸுஷும்னு நாடீ மார்க்கத்தால் வெளியேற்றி, அந்த ஜீவனை த்வாதசாந்தத்திலுள்ள ஸஹஸ்ரதள பத்மத்திலுள்ள பரமாத்மாவோடு, 'ஹம்ஸ:' என்ற மந்த்ரத்தால் ஒன்ருக்கி, தன் சரீரத்திலுள்ள பாபக்குவியலை மனித ரூபமாய் த்யானித்து, சோஷணம், தாஹனம், ப்லாவனம் இவைகளை வருமாறுசெய்யவும்.

ப்³ரஹ்மஹத்யாஶிரஸ்கந்த³ம் ஸ்வர்ணஸ்தேயபு⁴ஜத்³வயம் ।
ஸுராபாநஹ்ருதா³ யுக்தம் கு³ருதல்பகடித்³வயம் ॥ தத்ஸம்
யோக³பத³த்³வந்த்³வம் ப்ரத்யங்க³பாதகம் । உபபாதகரோ
மாணம் ரக்தஶ்மஶ்ருவிலோசநம் ॥ க²ட்³க³சர்மத⁴ரம் க்ருஷ்ணம் கு
க்ஷௌ பாபம் விசிந்தயேத் । தம் பாபபுருஷம் நாபி⁴
தே³ஶஸ்தி²தஷட்கோணாந்தர்க³தயகாரபீ³ஜாத்மகவாயு
நா ஶோஷயித்வா புநஸ்தம் ஹ்ருத³யதே³ஶஸ்தி²தத்ரிகோண
மத்⁴யக³தரகாரபீ³ஜாத்மகவஹ்நிநா தா³ஹயித்வா தத்³ப⁴ஸ்ம த³க்ஷிண
நாஸாபுடாந்நிஸ்ஸார்ய ப்⁴ரூமத்⁴யஸ்தா²ர்த⁴சந்த்³ராகாராம்ருத
மண்ட³லாந்தஸ்ஸ்தி²தவகாரபீ³ஜாத்மகாம்ருததா⁴ரயா நிஷ்க
ல்மஷம் ஸ்வஶரீரமாப்லாவ்ய ஶுத்³த⁴ம் க்ருத்வா த்³வாத³ஶாந்த
ஸ்தா²நம் ஸுஷும்நாநாடீ³மார்கே³ண ஹ்ருத³யகமலே ஓம்
ஸோऽஹமிதி மந்த்ரேண ஸ்தா²பயேத் ॥

---

*ப்ரமஹத்யையை சிரஸ்ஸாய் உடையவனும், ஸ்வர்ண ஸ்தேயத்தை இரண்டு கைகளாய் உடையவனும், ஸுராபானத்தை மார்பாய் உடையவனும், குருதல்பகமனத்தை இரண்டு இடுப்பாய் உடையவனும், தத்ஸம்யோகத்தை இரண்டு பாதங்களாய் உடையவனும், ஸம பாதகங்களை மற்ற அங்கங்களாய் உடையவனும், உபபாதகங்களை ரோமங்கள், நகங்கள், மீசை, கண்கள் இவையாய் உடையவனும், கத்தி, கேடயம் இவைகளைத் தரித்தவனும், கறுப்பு நிறமுள்ளவனுமாய் பாப புருஷனை வயிற்றில் இருப்பவனாய் த்யானிக்கவேண்டும். அந்தப் பாப புருஷனை, நாபி தேசத்திலுள்ள ஷட்கோணத்திலுள்ள 'யம்' என்னும் வாயுபீஜத்தால் சோஷணம் செய்து, மறுபடி அவனை, ஹ்ருதய தேசத்திலுள்ள த்ரிகோணத்திலுள்ள 'ரம்' என்னும் அக்னிபீஜத்தால் தஹிக்கசசெய்து, அந்தச் சாம்பலை வலது மூக்கின் த்வாரத்தால் வெளியேற்றி, புருவங்களின் மத்யத்திலுள்ள அர்த்தசந்த்ராகாரமான அம்ருதமண்டலத்தின் உள்ளிலுள்ள 'வம்' என்னும் அம்ருதபீஜத்தினின்றும் எழும்பிய அம்ருததாரையால் பாபமற்ற தன் தேஹத்தை மூழ்க்கி சுத்தமாய்ச் செய்து, த்வாதசாந்தஸ்தானத்தில் சேர்க்கப்பட்ட ஆத்மாவை ஸுஷும்நாநாடியின் வழியாய் ஹ்ருதய கமலத்தில், 'ஓம் ஸோஹம்' என்ற மந்த்ரத்தால் ஸ்தாபிக்கவேண்டும்.*

ஏவம் பூதஶுத்திம் க்ருத்வா ப்ராணப்ரதிஷ்டாம் குர்யாத் | ப்ராணப்ரதிஷ்டாமந்த்ரஸ்ய ப்ரஹ்மவிஷ்ணுமஹேஶ்வரா ருஷய: | ருக்யஜுஸ்ஸாமாதர்வாணி சந்தாம்ஸி | ப்ராணஶக்தி: பரா தேவதா | ப்ராணப்ரதிஷ்டாயாம் விநியோக: - ரக்தாம்போதிஸ்தபோதோல்லஸதருணஸரோஜாதிரூடா கராப்ஜை: பாஶம் கோதண்டமிக்ஷூத்பவமளிகுணமப்யங்குஶம் பஞ்ச பாணாந் | பிப்ராணா ஸ்ருக்கபாலம் த்ரிநயநலஸிதா பீநவக்ஷோருஹாட்யா தேவீ பாலார்கவர்ணா பவது ஸுககரீ ப்ராணஶக்தி: பரா ந: || இதி த்யாத்வா ப்ராணப்ரதிஷ்டாமந்த்ரம் ஜபேத் — 'ஆம் ஹ்ரீம் க்ரோம் யரலவ ஶஷஸஹோம் ஹம்ஸஸ்ஸோஹம் ஸோஹம்ஹம்ஸ: | அமுஷ்ய ப்ராணா இஹ ப்ராணா: அமுஷ்ய ஜீவ இஹ ஸ்தித: | அமுஷ்ய ஸர்வேந்த்ரியாணி அமுஷ்ய வாங்மநஶ்சக்ஷு:ஶ்ரோத்ரஜிஹ்வாக்ராணப்ராணா இஹாகத்ய ஸுகம் சிரம் திஷ்டந்து ஸ்வாஹா' இதி || அமுஷ்யஸ்யை தேவதாயை ப்ராணப்ரதிஷ்டாம் குர்யாத் ||

ததோ மாத்ருகாந்யாஸம் குர்யாத் —

'மாத்ருகாஸரஸ்வதீமந்த்ரஸ்ய ப்ரஹ்மா ருஷி: | காயத்ரீ

---

இவ்விதம் பூதசுத்தியைச் செய்து, ப்ராணப்ரதிஷ்டையைச் செய்யவேண்டும். அதன் ப்ரகாரம் மூலத்திலுள்ளது. த்யான ச்லோகத்தின் பொருள்:—“ரக்த ஸமுத்ரத்திலுள்ள ஓடத்தில் விளங்கும் சிவந்த தாமரைப்பூவிலிருப்பவளும், தாமரைபோன்ற கைகளால் பாசத்தையும், வண்டுகளை நாணாக உடைய கரும்பு வில்லையும், அங்குசத்தையும், ஐந்து பாணங்களையும், ஸ்ரக்கை யும், (பூமாலை அல்லது ஜபமாலை) கபாலத்தையும் தரித்தவளும், மூன்று நேத்ரங்களால் ப்ரகாசிப்பவளும், பருத்த ஸ்தனங்க ளுடையவளும், பாலஸூர்யன் போல் சிவந்த நிறமுடையவளு மான சிறந்த ப்ராணசக்தி தேவதை நமக்கு ஸுகத்தைச் செய்பவளாய் ஆகவேண்டும்” என்பது.

பிறகு மாத்ருகாந்யாஸத்தைச் செய்யவேண்டும். மாத் ருகா ஸரஸ்வதீ மஹாமந்த்ரத்திற்கு ப்ரஹ்மா ருஷி, காயத்ரீ

𑌛𑌨𑍍𑌦𑌃 । 𑌮𑌾𑌤𑍃𑌕𑌾 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀 𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌮𑌾𑌤𑍃𑌕𑌾𑌨𑍍𑌯𑌾𑌸𑍇 𑌵𑌿𑌨𑌿𑌯𑍋𑌗𑌃 । 𑌪𑌞𑍍𑌚𑌾𑌶𑌦𑍍𑌵𑌰𑍍𑌣𑌭𑍇𑌦𑍈𑌰𑍍𑌵𑌿𑌹𑌿𑌤𑌵𑌦𑌨𑌦𑍋𑌃𑌪𑌾𑌦𑌯𑍁𑌕𑍍𑌕𑍁𑌕𑍍𑌷𑌿𑌵𑌕𑍍𑌷𑍋𑌦𑍇𑌶𑌾𑌂 𑌭𑌾𑌸𑍍𑌵𑌤𑍍𑌕𑌪𑌰𑍍𑌦𑌾𑌕𑌲𑌿𑌤𑌶𑌶𑌿𑌕𑌲𑌾𑌮𑌿𑌨𑍍𑌦𑍁𑌕𑍁𑌨𑍍𑌦𑌾𑌵𑌦𑌾𑌤𑌾𑌮𑍍 । 𑌅𑌕𑍍𑌷𑌸𑍍𑌰𑌕𑍍𑌕𑍁𑌮𑍍𑌭𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌲𑌿𑌖𑌿𑌤𑌕𑌰𑌵𑌰𑌾𑌂 𑌪𑌦𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌂 𑌤𑍍𑌰𑌿𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌮𑌚𑍍𑌛𑌾𑌕𑌲𑍍𑌪𑌾𑌮𑌤𑍁𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌨𑌜𑌘𑌨𑌭𑌰𑌾𑌂 𑌭𑌾𑌰𑌤𑍀𑌂 𑌤𑌾𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿' 𑌇𑌤𑌿 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾 𑌬𑌿𑌨𑍍𑌦𑍁𑌸𑌹𑌿𑌤𑌾𑌂 𑌮𑌾𑌤𑍃𑌕𑌾𑌂 𑌨𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 ।

𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌸𑌾𑌰𑍇 𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑌭𑌿𑌹𑌿𑌤𑌮𑍍 — '𑌭𑌾𑌲𑌾𑌨𑌨𑌵𑍃𑌤𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌷𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌗𑌣𑍍𑌡𑍋𑌷𑍍𑌠𑌦𑌨𑍍𑌤𑌮𑍂𑌰𑍍𑌧𑌾𑌸𑍍𑌯𑍇 । 𑌦𑍋𑌃𑌪𑌤𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌗𑍍𑌰𑍇𑌷𑍁 𑌚 𑌪𑌾𑌰𑍍𑌶𑍍𑌵𑌦𑍍𑌵𑌯𑌪𑍃𑌷𑍍𑌠𑌨𑌾𑌭𑌿𑌜𑌠𑌰𑍇𑌷𑍁 ॥ 𑌹𑍃𑌦𑍋𑌰𑍍𑌮𑍂𑌲𑌾𑌪𑌰𑌗𑌳𑌕𑌕𑍍𑌷𑍇𑌷𑍁 𑌹𑍃𑌦𑌾𑌦𑌿𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑌯𑍁𑌗𑍍𑌮𑍇 । 𑌜𑌠𑌰𑌾𑌨𑌨𑌯𑍋𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑌕𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌤𑌾𑌨𑌕𑍍𑌷𑌰𑌾𑌨𑍍𑌨𑍍𑌯𑌸𑍇𑌤𑍍 𑌕𑍍𑌰𑌮𑌤𑌃' 𑌇𑌤𑌿 ॥ 𑌕𑍇𑌤𑌿 ॥ 𑌕𑌂 𑌶𑌿𑌰𑌃 । 𑌶𑌿𑌶𑌵𑌃 𑌅𑌕𑍍𑌷𑌿𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌨𑌾𑌸𑌿𑌕𑌾𑌗𑌣𑍍𑌡𑍋𑌷𑍍𑌠𑌦𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍇𑌕𑌂 𑌸𑌂𑌬𑌧𑍍𑌯𑌤𑍇 । 𑌦𑍋𑌃𑌪𑌤𑍍𑌸𑌨𑍍𑌧𑍍𑌯𑌗𑍍𑌰𑌾𑌣𑌿 𑌵𑌿𑌂𑌶𑌤𑌿𑌃 । 𑌦𑍋𑌰𑍍𑌮𑍂𑌲𑌦𑍍𑌵𑌯𑌂 𑌅𑌕𑍍𑌷𑌿

---

சந்தஸ், ஸரஸ்வதீ தேவதை, மாத்ருகா ந்யாஸத்தில விநியோகம். த்யானம் — ‘பஞ்சாசத்வர்ண + தாம நமாமி’ என்று. இதன் பொருள்:— ‘ஐம்பது அக்ஷரங்களால் கல்பிதமான முகம், கைகள், கால்கள், வயிறு, மார்பு ப்ரதேசங்களை உடையவளும், ப்ரகாசிக்கின்ற ஜடாஜூடத்தில தரிக்கப்பட்ட சந்த்ரகலையை யுடையவளும், சந்த்ரன், குருக்கத்திப்புஷ்பம் இவைபோல் வெண்ணிறமுள்ளவளும, ஜபமாலை, அம்ருதகும்பம், சின் முத்ரை, புஸ்தகம இவைகளைக கைகளிலுடையவளும், பத்மத்தில் இருப்பவளும, மூன்று கண்களை உடையவளும், நிர்மலமான அலங்காரமுடையவளும், பருத்த ஸ்தன ஜகனமுடையவளும், ஆன அந்த பாரதீதேவியை வணங்குகின்றேன்’ என்று.

ப்ரபஞ்சஸாரத்தில் ந்யாஸ ஸ்தானம சொல்லப்பட்டுள்ளது—‘காநந + க்ரமத’ என்று இதன் பொருள்:— நெற்றி, முகவ்ருத்தம், கண்கள் இரண்டு, காதுகள் இரண்டு, மூக்குகள் இரண்டு, கன்னங்கள் இரண்டு, உதடுகள் இரண்டு, பல் வரிசைகள் இரண்டு, தலை, வாய், கைகள், கால்கள், ஸந்தி அக்ரங்கள் முதலியவை இருபது, வயிற்றின் பக்கங்கள் இரண்டு, முதுகு,

